# ஹரிதாஸ ஹ்ருதய

## (பாகம் 5)

## மார்கசீர்ஷ & புஷ்ய மாதத்திற்கான ஹரிதாச சிந்தனைகளின் தொகுப்பு

கன்னடத்தில் :

திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார்
பெங்களூரு

தமிழில் மொழிபெயர்த்து வெளியிட்டவர்

'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்
89044 58276. haridasa.vijayam@gmail.com
jagannathakesava.blogspot.com

# ஹரிதாஸ ஹ்ருதய
# (பாகம் 5)

ஸ்ரீஹரிவாயு குருகளின் அருளால்
ஸ்ரீப்ராணேஷ தாஸரின் ஆராதனை நாளான
02-10-2022 அன்று வெளியிடப்பட்டது.

## ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து

## பொருளடக்கம்

# முன்னுரை

ஹரிதாச சாகித்யம் ஆத்யாத்ம / லௌகிக வாழ்க்கையின் பொருள் ஆகியவற்றை விளக்குவதாக இருக்கிறது. ஆகவே இன்றுவரை அந்த சாகித்யம் அழியாமல் வருகிறது. உடலில் இருக்கும் இதயம் எப்படி ரத்தத்தை சுத்தமாக்கி நாம் வாழ வழி செய்கிறதோ, அது போல இந்த 'ஹரிதாச ஹ்ருதய' நம் இதயத்தில் இருக்கும் அழுக்குகளை சுத்தமாக்க உதவுகிறது. இதில் தினத்திற்கு ஒன்று என்று சிந்தனை இருக்கிறது. இதில் இருப்பது விஷயங்களின், தத்வங்களின் சாரம் / சுருக்கம் மட்டுமே.

ஹரிதாஸ ஹ்ருதய என்னும் இந்தப் புத்தகத்தை கன்னடத்தில் எழுதியவர் திரு.ஏ.பி.ஷ்யாமாச்சார் அவர்கள். ஒரு ஆண்டில் வரும் 360 நாட்களில், நாளுக்கு ஒன்று என மொத்தம் 360 சிறிய கட்டுரைகள் இதில் உள்ளன. சைத்ர & வைஷாக மாதத்தின் கட்டுரைகள் பாகம் 1ல் வெளிவந்தன. இந்த பாகம்-2ல் ஜ்யேஷ்ட & ஆஷாட மாதங்களின் கட்டுரைகள் உள்ளன.

ஹரிதாசர்களின் புண்ணிய தினங்கள், பண்டிகை, விரத நாட்களில் - அந்தந்த ஹரிதாசர்களைப் பற்றி / பண்டிகை விரதங்களைப் பற்றி மற்ற ஹரிதாசர்கள் பாடிய குறிப்புகள் இதில் உள்ளன. மத்வ சித்தாந்தக் கருத்துகள் அனைத்தையும் பற்றியும் ஹரிதாசர்கள் பாடியுள்ளனர். அவை அனைத்தும் இந்தப் புத்தகத்தில் மேற்கோள் காட்டப்பட்டுள்ளன. இந்த முழுப் புத்தகத்தையும் படித்தால், ஹரிதாசர்களின் கருத்துக்களின் வழியே, நம் மத்வ சித்தாந்த தத்வங்களை சுலபமாக அறியலாம்.

அனைவரும் இந்தப் புத்தகத்தை படித்து, அடுத்து வரவிருக்கும் பாகங்களையும் வாங்கிப் படிக்கவேண்டும் என்று விரும்புகிறோம். அனைவருக்கும் ஹரிவாயு குரு ஹரிதாசர்களின் அருள் என்றைக்கும் கிடைக்கட்டும் என்று ஸ்ரீஹரியிடம் வேண்டிக் கொள்கிறோம். ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து.

**15-06-2022** **'ஜகன்னாத கேசவ' சத்ய நாராயணன்**

**மார்கசீர்ஷ சுத்த ப்ரதிமை**

## நாக்கு சுத்தமாக இருக்கட்டும்

நாடமாது பேட நாலிகெ நின்ன
பேடிகொம்பேனு கண்ட்ய நாலிகெ |
கோடிகெ ஸ்ரீஹரி கைவல்யதானிய
நாமவ நெனெ கண்ட்ய நாலிகெ ||ப||

ஹாஸ கொத்தாரெத்து நாலிகெ ஸ்ரீனி
வாசன நெனெ கண்ட்ய நாலிகெ
ஷக்தனந்தெ நீனு மத்தெ பூகளதிரு
சத்தஹாகிரு கண்ட்ய நாலிகெ ||1||

உம்போது உடுவோது நாலிகெ பஹு
தாம்பூல கொண்டெ நீ நாலிகெ
முந்தெ காணதெ ஹோகி பந்து ஜகக்கெ
தந்து நெலிஸித நாலிகெ ||2||

அத்தெ மாவன வைவ நாலிகெ இது
மத்தெ கண்டன பைவ நாலிகெ
சுத்துமுத்தரதிந்த தேவ பிரம்மர பைவ
நாய ஹாகிரு கண்ட்ய நாலிகெ ||3||

ரச பாயாரும்பேரு நாலிகெ ஸ்ரீனி
வாசன நெனெ கண்ட்ய நாலிகெ
பொடவியொடெய என்ன புரந்தரவிட்டலன்ன
நாமவ நெனெ கண்ட்ய நாலிகெ ||4|| -- ஸ்ரீபுரந்தரதாசர்

'ஆசாரவில்லத நாலிகெ நின்ன நீச புத்திய பிடு நாலிகெ' என்று நாக்கிற்கு அறிவுரை கூறிய தாசர், இங்கு நாக்கிற்கு நல்ல வார்த்தைகளை உபதேசம் செய்கிறார். நம் சிந்தனைகளை வெளியில் சொல்வது நம் மொழியே. இது முகத்தின் / நாக்கின் மூலம் வெளிவருகிறது. அதாவது நம் மனதில் இருப்பவை வெளியில் வருவது நம் நாக்கின் மூலமாகவே. அதற்கே, நாக்கிற்கு எச்சரிக்கை விடுக்கிறார் தாசர். நாக்கின் ஆசை, யாரையும்

அடிமைப்படுத்தவல்லது. அது கோள் மூட்டக்கூடியது. பொய் பேசக்கூடியது. மனதை நோகடிக்கக் கூடியது. ஆகவே இதை திருத்தி, இப்படி இருக்கவேண்டும் என்று ஆறுதல் வசனங்களைக் கூறி அறிவுறுத்தினார்கள். இது அனைவரும் கவனிக்க வேண்டிய விஷயமாகும்.

**மார்கசீர்ஷ சுத்த த்விதியை**

**மனதின் வருத்தம்**

என்ன மன விஷயங்களலி முணுகிதோ
என்ன தனு வ்ருத்தாப்யவனு ஐதிதோ
அந்தகர கரெ பாஹோ ஹொத்தாயிதோ
காலவிளம்பன வினிதில்ல வய்யா
வ்யாள்யவரிது பின்னஹ மாடிதெ
ஹீகெ தரளர பிடுவ தாயிகளுண்டே
நீ கருணானிதியெம்ப பிருதுஸல்லது தேவ
கருணாகர சிரிரங்கவிட்டலரேய
நீ கருணானிதியெம்ப பிருதுஸல்லது தேவ
கால விளம்பவு இனிதில்லவைய்யா
வியாள்ய அரிது பின்னஹமாடிதெ || --ஸ்ரீஸ்ரீபாதராயர்

அனந்த காலதல்லி நின்ன நானரியதெ பவகளல்லி பந்தேனோ
அனந்த காலதல்லி நின்னவனெனிஸதெ மூருகனாதேனோ
அனந்த காலதல்லி நின்ன சரண ரதியல்லதெ நொந்தேனோ
அனந்த காலதல்லி ஆவாவ புண்யதிந்த பந்து இந்து
நின்னவனெனிஸிதெ ஆவாவ புண்யதிந்தலென்ன மன
நின்னலெல்லரிது நோடுவந்தெ
என்ன பொரெது பாலிஸோ தீனனாத ஸ்ரீரங்கவிட்டலா || --ஸ்ரீஸ்ரீபாதராயர்

பரர பாகில காய்த போய்தென்ன சம்சார
பரர மாடி மாடி போய்தென்ன ஜன்மவு
பரர பொகளி பொகளி போய்தென்ன நாலிகெ
பரர கருணாகரன தொட்ட பெட்டவ கண்டு
வரம்ருககளு ஒதரிதந்தெ ஹருஷவாகுவுதேனோ

கல்லுகோவின ஹாலு கருபளசுவந்தெ
அகடகட மந்தமதியு நானல்லவெ
பல்லிகராஸெ பிடிஸோ சிரிரங்கவிட்டலரேய ॥

இங்கு தாசர் சொல்வது, நம் அனைவருக்குமானதாகும். 'என்ன பொரெது பாலிஸோ தேனனாத ரங்கவிட்டலா'

## மார்கசீர்ஷ சுத்த த்ருதியை
## ஹரிபக்தர்களை நிந்திப்பவர்கள்

சாதனை மார்க்கத்தில் இருப்பவர்கள் தினமும் தேவபூஜை செய்யும்போது, ஸ்ரீஜயதீர்த்தர் தனது பத்யமாலாவில் தெரிவித்த ஸ்லோகமான 'வைஷ்ணவ த்வேஷ ஹேதொம்மெ பச்மசாத் குரு மாதவ' என்று கேட்கும் வழக்கம் இருக்கிறது. இதன் பொருளாக ஸ்ரீவிஜயதாசர் தம் சுளாதியில் - என்றைக்கும் ஹரிபக்தரின் த்வேஷம், நிந்தித்தல் கூடாது என்று போதித்தார்.

ஹரிபக்தர ஒம்மெ நிந்தெ மாடிதவ ।
நரகவாஸி என்னி விஜயவிட்டல பொலியா ॥

ஹரிபக்தர்கள் என்றைக்கும் யாருக்கும் கெட்டது நினைக்கமாட்டார்கள். அவர்களது தூய்மையான வாழ்க்கையே மற்றவர்களுக்கு வழிகாட்டியாக இருக்கிறது. எப்போதும் ஸ்ரீஹரியை நினைப்பதிலேயே இருப்பர்.

சாரிதெ நினகெ நன்ன ஹிரியரு பேளித்து
தாரிய தப்பதிரு எலோ மனவெ
பாரு முட்டது காணோ சுஜனர நிந்த்யகளிந்த
கோர தமஸினலி வாச அவகெ । -- ஸ்ரீவிஜயதாசர்

சஜ்ஜனரான ஹரிபக்தர்களை நிந்தித்தால் தமஸ்ஸே கதி என்று கூறினர். அதற்கே:

சல்லது சல்லது பயஹாரிய பக்தர । நில்லதெ தோஷிசுவ நிஷ்டுர வசனகளு ।

எல்லித்தாரெ ஏனு எந்து நடெதரேனு । பல்லிதரு காணே அவரு ஜகத்தினொளு ।
சல்லுவரு ஹரிய பாதபல்லவ சேவெகெ । பல்லவரு என்ன யோக்யதானுசார ॥

சஜ்ஜனர்களை, உத்தமர்களைக் கண்டால், நாம் செய்யவேண்டியது என்ன?

உத்தமரனு கண்டு எத்தி கரகள முகியெ
சித்ததலி பாபதத்த போகதிரு
தொத்து வார்திகெ கிவியித்து கேளதிரு
சோத்தமர கூட ப்ரதிமாடதிரு
ஆத்மஸ்துதிய இடு எத்ததிரு பரர நிந்தெ ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

கூடவே, நம்மை எப்போதும் அமைதியான மனநிலையில் இருக்குமாறும் அறிவுறுத்துகிறார்.

நிந்தா மாடிதரெந்து நொந்து கொளலி பேட
வந்திஸிதரெந்து நந்தவ படபேட
நிந்தெ வந்தனெகளு ஆராரவு ஹெச்சு ॥

மேலும்:

சகல போஷககெ ப்ராயஸ்சித்த உண்டு நின்
தககெ இல்லவோ காணோ விஜயவிட்டல பல்ல ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

**மார்கசீர்ஷ சுத்த சதுர்த்தி**

**பல நிலைகளில் நம் கதி என்ன?**

பிறந்து வந்த மனிதன், இறப்பதற்குள், பல நிலைகளை (ஆசிரமங்களை) கடந்தே ஆகவேண்டும். அனைத்துமே கடினம்தான். அதிலும், கிருஹஸ்தாஸ்ரமத்திற்குப் பிறகான நிலையை, ஸ்ரீ வியாஸராஜர், உடல் - மனநிலையை, மிகவும் அழகாக வர்ணித்து, அதிலிருந்து தப்பிக்கும் விதங்களைப் பற்றி விளக்குகிறார்.

தேஹ ஜீர்ணவாயிது தன
நேஹ ஜீர்ணவாகது ।

கண்ணு கிவி மந்தவாயிது
ஹெண்ணு மண்ணினாஷெ மந்தவாகது ।
காலு கை ஜவகுந்திதவு
போகலோலதெ ஜவகுந்தவு ।
ஜரெ லோகதிந்த நெரெஹொரெ ஹேஸிது
ஈ ஷரீரதல்லி ஹேஸிகெ இனிதில்லா ।
பாபகோடிகள மாடுதித்து அனு
தாப மனதொள கினிதில்ல ।
ஹீகெ சந்து ஹோயிது காலவெல்லவு
முந்தின கதி தாரி தோரது ।
அனாதியிந்த நின்னவனெனிஸித என்ன குந்து நின்னதல்லவெ ।
இன்னாதரு தயெயிந்தென்ன நோடி
மன்னிஸ பேகைய்ய என்னனு சிரிகிருஷ்ண ॥ -- ஸ்ரீவியாஸராஜர்

நேரம் யாருக்கும் காத்திருப்பதில்லை. மனிதன் பல ஆசை விருப்பங்களுக்கு பலியாகிறான். ஆனால் உடலை காலம் மெதுவாக அழிக்கிறது. இந்திரியங்களின் ஆசை தீர்ந்தாலும், மனதின் ஆசை தீர்வதில்லை. லகான் இல்லாத குதிரையைப் போல நிலை ஆகிறது. உடல் உறுப்புகளின் நிலையை ராஜர் சொல்கிறார். உடலின் நிலையும் அதனுடன் சேர்ந்துகொண்டு, வகைவகையான பிரச்னைகளை சந்திக்கிறது. அடுத்து என்ன என்று தெரிவதில்லை. அப்போது ஸ்ரீஹரியின் நினைவு வருமா?

காலத்தைப் போன்றே எதுவும் நம் கையில் இல்லை என்றபோது, அனைத்திற்கும் கதி ஸ்ரீஹரியே என்று நினைக்கவேண்டும். அப்போதாவது உன் கால்களில் சரணடைவேன் என்றார். 'இன்னாதரு தயெயிந்தென்ன நோடி மன்னிஸபேகைய்யா என்னனு சிரிகிருஷ்ணா' என்று வேண்டினார்.

**மார்கசீர்ஷ சுத்த பஞ்சமி**

## கடிதம் வந்திருக்கிறது

காகத பந்திதெ நம்ம கமலனாபனது ஈ
காகதவன்னு ஓதிகொண்டு காலவ களெயிரோ ॥

ஸ்ரீஹரியின் ஆணை, செய்திகளே கடிதம். 'ஸ்ருதிஸ்ம்ருத்யெள ஹரேராக்ஞே'. பிறந்து வந்த அனைவரும் ஸ்ரீஹரியின் கடிதத்தைப் போல வரவேண்டும் போகவேண்டும். அதாவது, விதி, விதிவிலக்குகளுக்கு ஏற்றவாறு நடக்கவேண்டும். கடிதத்தில் இருப்பதுபோல நாம் நடந்தால் மட்டுமே சத்கதி. அந்தக் கடிதத்தில் என்ன இருக்கிறது என்று புரந்தரதாசர் சொல்வதைப் பார்ப்போம்.

காம க்ரோதவ பிடியெரெம்போ காகத பந்திதே
நேம நிஷ்டெயொளிதிரெந்து காகத பந்திதே
தாமஸ ஜனப கூடதிரெந்து காகத பந்திதே
நம்ம காமனய்யனு தானே பரெத காகத பந்திதே ||1||

ஹெண்ணினாஸே பிடியிரெம்போ காகத பந்திதே
ஹொண்ணினாஸே பிடியிரெமோ காகத பந்திதே
மண்ணினாஸே பிடிரெம்போ காகத பந்திதே
நம்ம கமலனாபனு தானே பரெத காகத பந்திதே ||2||

கெஜ்ஜெ கால்கட்டிரெம்போ காகத பந்திதே
ஹிஜ்ஜெ ஹிஜ்ஜெகெ ஹரியென்னிரெம்போ காகத பந்திதே
லஜ்ஜெ பிட்டு குணியிரெம்போ காகத பந்திதே
நம்ம புரந்தரவிட்டல தானே பரெத காகத பந்திதே ||3||

ஸ்ரீபுரந்தரதாசரின் கீர்த்தனைகள் அனைத்துமே ஸ்ரீஹரி எழுதி அனுப்பிய கடிதங்களே ஆகும். இங்கு சில விஷயங்களை மட்டுமே சொல்லியிருக்கிறார் என்று அறியவேண்டும். இதுவே நம் அனைத்து ஹரிதாசர்களும் சமூகத்திற்கு செய்த மிகப்பெரிய உதவி. நம் கமலனாபனிடமிருந்து கடிதம் வந்திருக்கிறது என்றால், அது அவர் நமக்குக் கொடுக்கும் எச்சரிக்கைமணி என்று அறியவேண்டும்.

அதுவே நம் சத்கதிக்கான வழி. ஹரிதாசன் ஆவதற்கு இந்த அனைத்து குணங்களையும் பெற்றிருக்கவேண்டும் என்பது மறைந்திருக்கும் பொருள். 'ஹெஜ்ஜெ ஹெஜ்ஜெகெ ஹரியென்னி' என்பதில் எப்போதும் ஹரி நாமம் நம் மனதில் இருக்கவேண்டும் என்கிறார். காரணம் ஸ்ரீஹரி சர்வநியாமகனாகி, அனைவரிலும் உள்ளே மற்றும் வெளியே வியாபித்திருக்கும் சர்வோத்தமன்.

அனைவரையும் காப்பாற்றும் புருஷோத்தமன். இந்த கிருதியின் மூலம் தாசர், நம் சத்கதிக்கான வழியையே சொல்கிறார்.

**மார்கசீர்ஷ சுத்த சஷ்டி**

**தாமஸ ஜீவர்கள்**

'சந்ததம் சிந்தயேனந்தம்' என்றார் ஸ்ரீமதாசார்யர். பிறந்து வந்த ஜீவர்கள் எப்போதும் ஸ்ரீஹரியை நினைத்தவாறு சதாசார, நற் செயல்களில் ஈடுபடவேண்டும். அனாசாரத்தை பின்பற்றினால், அதனை நடத்துபவரான கலி முதலான தைத்யர்களை நினைக்க வேண்டும். அந்த செயல்களிலிருந்து வந்த பாவங்கள் அவரையே சேரட்டும் என்று வேண்டுவோம்.

கலிமுக்ய த்ருத்யரனு ஸ்மரிஸி பிடதெ
கலுஷவர்ஜித பாகவதரு மரெயதலெ ||ப||

மல மூத்ரகள விசர்ஜனெ கைவாக எஞ்
சல கைபாயித்தெளரு உகுளுவாக
ஹுளிபீஜ கவடெ பகடெகளாடுவாக ம
க்கள நாடிசுதலி விஸ்மரணெயிந்திருவாக ||1||

சந்திகாலதலி சதியொடனெ பவடிஸிதாக
நிந்த்ய கர்மகளனாசரிசுவாக
தந்தெ தாயிகள தின மரெதுபிட்டாக க
ர்மேந்தி பிக்ஷகெ பரலு இல்லெம்புவாக ||2||

மாசோக்ததர்மவனு தொரெதாக விப்ரகோ
க்ராஸகள கொடதெ புஞ்சிஸுவாகலே
மேஸலு மாடி மைலிகெகள நோடதலெ து
ஷ்டாஸெயலி நீசராலயதலும்பாக ||3||

ப்ராயதனததிந்த ஹேய விஷயகளுபா
தேயவெந்தரிது புஞி சுவாகலு
ஜாயாத்ம தேஹாதிகளு தன்னதெம்பாக
மாயவாதிய உகுதி மனகெ தந்தாக ||4||

மதிவந்தரொடனெ மத்ஸர புட்டிதாகன
ர்பித பதார்தகள புஞ்சுவாகலு
ம்ருதவத்ஸ கோவின பாலனும்பாக ஸ்ரீ
பதி ஜகன்னாதவிட்டலன ஸ்ம்ருதி பிட்டாக ||5||
(ஸ்ரீஜகன்னாததாசர்)

இந்த கிருதியில் ஸ்ரீஜகன்னாததாசர், அனாசாரங்களின் / கெட்ட செயல்களின் ஒரு பெரிய பட்டியலையே கொடுத்திருக்கிறார். இவை நம் சாதனைக்கு தடையாக இருப்பவை. கெட்ட சக்திகளின் பார்வை நம் மேல் விழாதவாறு, என்றும் அவைகளிடமிருந்து தூர இருங்கள் என்று எச்சரிக்கிறார். என்ன ஆனாலும், என்றைக்கும் ஸ்ரீபதி ஜகன்னாதவிட்டலனின் நினைவை விடாதீர்கள் என்கிறார்.

**மார்கசீர்ஷ சுத்த சப்தமி**

**ஜீவ கர்த்ருத்வ**

ஸ்ரீஹரியினாலேயே ஜீவர்களுக்கு கர்த்ருத்வ கொடுக்கப்பட்டுள்ளது என்று சாஸ்திரங்களில் உள்ளது. அப்படியே 'தேன வினா த்ருணமபி ந சலதி' என்றும் சிந்தாந்தத்தில் சொல்லப்பட்டுள்ளது. இதை கோபாலதாசர் தமது ஒரு சுளாதியில் மிகத் தெளிவாக விளக்குகிறார்.

கர்த்ருத்வ எம்புது ஜீவ ஸ்வரூபவு
ஹத்தி இப்புது நோடு அனாதியிந்தலி நித்ய
தத்தவாகிதெ ஈஷனிந்தவெம்ப மாது
ஆர்துனோடி ஹரிய ஹொர்து ஆகுவுதல்லி
மர்தரெ மரெவுவ ஆர்தரெ அரிவுவ
கர்த்ருகார்யதா சர்வஸ்வதந்த்ர ஹரிதானு
சூத்ர நாடக சர்வஜேஷ்ட தாமாடிஸெ
கீர்த்தி அபகீர்த்தி ஜீவர்க தந்தீவ
ஸ்நார்தபாரரஹித கோபாலவிட்டல
ஆர்திதரிவ அரிது பக்தர மனவ || -- ஸ்ரீகோபாலதாசர்

ஜீவ கர்த்ருத்வத்தைப் பற்றி சொல்லும் தாசர், சாதனையின் கிரமம் மற்றும் அதன் பலாபலன்களைப் பற்றியும் விளக்குகிறார்.

கர்த்ரு நானெந்தரெ தோஷ பல ப்ராப்தி
கர்தனல்லவெந்தரெ சாதனக்கெ பலவில்ல
வியர்த்த சும்மனெப்புதக்கெ ஜீவ ஜடவல்ல
கர்த்ரு ஜீவெம்புவுது ஸ்ருதி ஸ்ம்ருதிகளலி சித்த
கர்த ஜீவெம்புது ஜீவ ஸ்வாதீனவல்ல
கர்த்ருனிஷ்டதர்ம கொட்டரிவரிகெ உண்டு
கொர்த்ரெ மாடுவனல்ல கொட்ட கர்த்ருத்வன்ய
நிஷ்டவாகி ஜீவக்யெத்தி தா இப்புது
ஸ்பூர்த்தி பந்தரெ அரிவ ஸ்பூர்த்தி பரதிரெ மரெவ
காத்ர ஹஸிதரெ அளுவ காத்ர தும்பலு நலிவ
கீர்த்தி அபகீர்த்தி தன்னதெந்து ஹிக்குவ
...
கர்த்ருகார்ய தா விஷ்ணு கோபாலவிட்டல
பாத்ராபாத்ரவரிது பலவீவ || -- ஸ்ரீகோபாலதாசர்

ஸ்னேஹதி ஹரி கொட்ட கர்த்ருத்வவு எனகெ
நீ இல்லதே என்னிந்தாகதெந்திப்புதே ந்யாயத வைராக்ய || -- ஸ்ரீகோபாலதாசர்

**மார்கசீர்ஷ சுத்த அஷ்டமி**

## ஸ்ரீஹரியின் ஆணை

ஸ்ரீஹரியின் மகிமைகளை, அவனின் தலைமையை வேதங்களில் சொல்லியவற்றை, தாசர் இங்கு மிகவும் எளிமையாக விவரித்து நமக்கு கொடுத்திருக்கிறார். இதுவே ஸ்ரீமதாசார்யரின் சித்தாந்தத்தின் கருத்துகள் ஆகும்.

ஹரிய ஆக்ஞேயிந்த அக்னியு ஜ்வலிசுதிஹனு
ஹரிய ஆக்ஞேயிந்த தரணி தா திருகுவனு
ஹரிய ஆக்ஞேயிந்த மருத தா பீசுவனு
ஹரிய ஆக்ஞேயிந்த ஹரிவவு சலிலகளு
ஹரிய ஆக்ஞேயிந்த இருதிஹது ஆகாஷ
ஹரிய ஆக்ஞேயிந்த த்ரிசிஹளே தரணி
ஹரிய ஆக்ஞேயிந்த பரிடவிசுவ சந்த்ர
ஹரிய ஆக்ஞேயிந்த மரபள்ளி பலிசுவவு
ஹரிய ஆக்ஞேயிந்த கரெவவு கோவுகளு

ஹரிய அதீன இவரவரெந்து மிதியில்ல
ஹரியே சர்வ வியாப்த சேஷ்டேகே நியாமக
சரியில்லத வஸ்து கோபாலவிட்டல
இருதிப்ப இஷ்டரொளுஅரிது யோக்யதெய || -- ஸ்ரீகோபாலதாசர்

'தேன வினா த்ருணபமி ந சலதி' என்பது வேத வாக்கு. 'அணுரேணு த்ருணகாஷ்ட' அணுவிலும் வியாபித்து அதை காப்பவனாக இருக்கிறார் ஸ்ரீஹரி. இத்தகைய ஸ்ரீஹரியை அறிவதற்கு, வர்ணிப்பதற்கு சாத்தியமா? அவனின் ஆணை மற்றும் விருப்பம் இல்லாமல், பிரம்மாண்டத்தில் எதுவும் நடப்பதில்லை. லட்சுமி, பிரம்மா மற்றும் ருத்ரர் முதலோனோர் ஸ்ரீஹரியின் சேவகர்கள் - ஆணையைப் பெற்று நடப்பவர்கள். ஸ்ரீஹரியின் குணங்களை ஸ்ரீவிஜயதாசர் தனது இந்த சிறிய பத்தியில் விளக்குகிறார்.

நிராதார நிஸ்ஸங்க நிரமலாங்க
நிராமய நிர்தோஷ நீரதபாஸ
நிரஞ்சன நிர்குண நிராவரண
நீரஜரமண நிராஸ்ரயனெ நிர்விகல்ப
நிர்விகார விஜயவிட்டல
திருமங்களேஷ திருபதிவாஸ ||

'ஈஷாவாஸ்யம் இதம் ஜகத்' என்று வேதங்கள் அவன் இல்லாத, அவனுக்குள் இல்லாத என்று எதுவுமே இல்லை என்கிறது. சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனாகி சர்வ நியாமகனாகி இருப்பவன் ஸ்ரீஹரி.

**மார்கசீர்ஷ சுத்த நவமி**
**என் தோஷங்களை நீக்குவாயாக**

பிறந்து வந்த நாம், செய்துவரும் அபராதங்கள் ஏராளம். ஆனால் இதைப் பற்றிய அறிவே நமக்கில்லை. அது தெரிந்தால் மட்டுமே கொஞ்சமாவது திருந்துவது சாத்தியம். தெரியாமலேயே இருந்தால், ஸ்ரீஹரியிடம் மன்னியுங்கள், கருணியுங்கள் என்று கேட்பது எப்போது? அதற்காகவே, ஸ்ரீவியாசராயர், சஜ்ஜனர்களின் மேல் இருந்த கருணையால் ஸ்ரீஹரியிடம் இவ்வாறு கேட்கிறார்.

ஆத்யபராத மித்யாக்ஞான
த்விதீய ஹரிய விஸ்மரணெ
த்ருதீய நிஷித்தாவிஹிதாசரணெ
சதுர்த்த அயோக்யனல்லு உபதேச கரண
கருணாகர ஈ அபராதக்கெல்ல ஸ்ரீகிருஷ்ண
நீ தயதிந்த நோடய்யா || -- ஸ்ரீவியாசராஜர்

மிகவும் முக்கியமான நாம் செய்யும் இந்த தவறுகளை நமக்குத் தெரிவிக்கும் ஸ்ரீராஜர், நமக்கு இது ஏன் தவறு என்றே புரிவதில்லை, தெரிவதில்லை என்று அதன் காரணத்தை கொடுக்கிறார்.

பக்தி லேஷத ப்ரஸக்தி எனகில்ல | ஞானவெம்புதனேன காணே நா|
வைராக்யத வாருதெ சேரதெனகெ | ஆசார விசார எனகில்ல |
ஞானவெம்புதனேன காணே நா | ஆனோப்பனெ கிருஷ்ண நின்னவரொளு |
மானுஷபசு தயயிந்தென்ன நோடய்ய || -- ஸ்ரீவியாசராஜர்

இப்படி ஸ்ரீஹரியிடம் நம் தவறுகளை பட்டியலிட்டு, நீயே என்னில் இருந்து சத்கர்மங்களை செய்விப்பாயாக என்று வேண்டினார். இதற்கு ராஜர் கொடுத்த விளக்கம் இவ்வாறு - 'தன்ன சிசு தப்பிகெ ஜனனி கைய பிடுவளே' – என்று வேண்டினார்.

மேலும் அவர் கிருஷ்ணனை வேண்டியது இவ்வாறு:

ஒந்து சாதன காணே உசிதவே ஸ்ரீகிருஷ்ண |
எந்தெந்திகு நின்ன தாசனெனிஸோ ||

அய்யயய்ய இதெந்து தீருவுதய்ய
தந்தெ ஸ்ரீகிருஷ்ண சந்தருஷனவில்லதெ ஈ
தந்துகவ நீகுவ பகெ பேரில்லா ||

**மார்கசீர்ஷ சுத்த தசமி**

**பிழைத்திருக்கிறேன்**

மனிதனுக்கு அவனது வாழ்க்கையில் பணிவு வருவது எப்போது? அனைத்திலும் திருப்தி உண்டாகும்போது. அதாவது, ஸ்ரீஹரியின்

கருணைக்கு பாத்திரனாகும்போது. இப்படி இருக்கையில், நமது நிலை எப்படி இருக்கவேண்டுமென்று கனகதாசர் கூறுகிறார்.

ஹரி நின்ன பதகமல கருணதிந்தலி எனகெ
தொரகிதே குருசேவே ஹரியே ||

ஸ்ரீஹரி தரிசனம் கொடுத்தான் என்றால், வேறென்ன வேண்டும்? ‘கிமலப்யம் பகவதி ப்ரஸன்னே ஸ்ரீனிகேதனே’ என்று திருப்தி அடைந்து கனகதாசர் பாடுகிறார்.

பதுகிதேனு பதுகெதேனு பவ எனகெ ஹிங்கிது |
பதுமனாபன பாததொலுமெ எனகாயிது ||

திருப்தி அடைந்தவன் தன் வாழ்க்கை முழுமையாயிற்று என்று நினைத்தால், முதலில் நினைவுக்கு வருவது ஸ்ரீஹரியே. அனைத்திற்கும் அவனே காரணம் ஆதலால். தன் உடல், மனம், இந்திரியங்கள் ஆகியவை உன் வசமாயிற்று என்கிறார்.

ஹரிதீர்த்தப்ரஸாத என்ன ஜிஹ்வெகொதகிது
ஹரிய நாமாம்ருத கிவிகொதகிது
ஹரிய தாஸரு என்ன பந்துகளாதரு
ஹரிய ஸ்ரீமுத்ரே ஆபரணவாயிது ||

மனிதனின் நாக்கு, ஹரியின் பிரசாதத்தை தின்பதற்கே ஆசைப்படுகிறது. காதுகள் ஹரியின் மகிமைகளைக் கேட்பதற்கு ஆசைப்படுகிறது. இப்படி இருந்தால், ஹரிதாசர்கள் நம்மவர் ஆகின்றனர். அப்போது மட்டுமே ‘முகுதி மார்க்கக்கெ யோக்ய நானாதேனோ’ என்னும் வாக்கு உண்மையாகிறது. உண்மையில் சொன்னால், இதுவே செல்வம். இப்போதே இப்பிறவிக்கு பொருள் வந்தது என்கிறார்.

இந்தென்ன ஜீவக்கெ சகல சம்பதவாயுது
முந்தென்ன ஜன்ம சபலவாயிது
தந்தெ ஸ்ரீகாகினெலெ ஆதிகேசவராய
பந்தென்ன ஹ்ருதயதலி நெலெயாகி நிந்த || -- ஸ்ரீகனகதாசர்

ஸ்ரீகனகர், தாம் கண்டதை, அனுபவித்ததை சஜ்ஜனர்களின் முன் வைத்தார். இதுவே அவரது சுபாவம். மற்றவரும் அதையே அனுபவிக்க வேண்டும் என்பது அவரது ஆசை. அனைத்தையும் விட முக்கியம், வாழ்க்கையில் திருப்தி. ஸ்ரீஹரியின் கருணை. அப்போது வாயிலிருந்து வருவது 'பதுகிதேனு பதுகிதேனு பவ எனகெ ஹிங்கிது' என்பது.

**மார்கசீர்ஷ சுத்த ஏகாதசி**

**ஹரிரேவ பர:**

ஹரிதாச சாகித்யத்தின் முக்கிய நோக்கம் ஹரி சர்வோத்தமத்வத்தை பரப்புவதே. ஈசனான ஹரி தாசனான ஜீவர்களை காப்பாற்றுவான் என்பது. ஸ்ரீமதாசார்யர் 'ஹரிரேவ பரோ, ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி:' என்றார். ஸ்ரீவிஜயதாசர், தமது சுளாதி ஒன்றில் ஸ்ரீஹரியின் மகிமைகளை தெரிவிக்கிறார்.

ஹரியே ஜகக்கெ கர்த்தா ஹரியே ஜகக்கெ பர்த்தா
ஹரி சர்வசஹா விஜயவிட்டலனெ ஷக்தானென்னி
ஹரி பரஞ்சோதி ஹரி பரதெய்வதி
ஹரி சர்வோத்தம ஹரி புருஷோத்தம
ஹரி பரபொம்ம ஹரி சக்ரவர்த்தி
ஹரி பரந்தாம ஹரி சாசிரநாமா
ஹரி சர்வபௌம ஹரி பக்தர ப்ரேம
ஹரி பரிபூர்ண ஹரி நானா வர்ண
ஹரி குணகணாம்போதி ஹரி சர்வசித்தி
ஹரி சர்வதாவீர்ய ஹரி விபுதரவர்ய
ஹரி பாவன காய ஹரி புவன மாய
ஹரி பரமாத்ம ஹரி உத்தமோத்தம
ஹரி பரதத்வ ஹரி நிருத சத்வா
ஹரி நித்யானந்தா ஹரி சிரிகோவிந்த
ஹரி நித்யத்ருப்தா ஹரி சகலவியாப்த
ஹரி விரஹித ஜாத ஹரி ஜகன்னாத
ஹரி ஏகமேவ ஹரி ஆகவனதாவா
ஹரி நிர்பய சூர ஹரி நானாவதார

ஹரி பஹுலாவண்ய ஹரி சதா தாருண்ய
ஹரியில்லதெ மத்தெ ஹரிய பல்லவருண்டே
ஹரியுவதார ஸ்ரீவிஜயவிட்டலரேய
ஹரியே த்ரிபுவன தொரெயெந்தவனெ ஞானி ||

ஹரியே பரமபுருஷ ஹரி பராத்பர தேவ
ஹரி சதுரனாஷரஹித ஹரி அசிந்த்யாத்புத
ஹரி அப்ராக்ருத காயா ஹரி பிரளய விரஹித
ஹரி முக்தாஸ்ரய ஹரி சர்வாந்தர்யாமி
ஹரி ஜீவ ஜடகெ பேத ஹரி அணுமஹாரூப
ஹரி கர்தா ஜகத்காரண ஹரி ரமாதய ப்ரிய
ஹரி வைகுண்டரமண விஜயவிட்டலரேய
ஹரி தோருவனு பகுதி கைகொண்ட மனுஜரிகெ || -- ஸ்ரீவிஜயதாசர்

**மார்கசீர்ஷ சுத்த த்வாதசி**
**சஜ்ஜனர்களின் தினப்படி நடவடிக்கைகள்**

சாவேரி ராகம். ஜம்பெ தாளம்

தினகளனு களெவ ஜனரே சுஜனரு ||ப||
வனஜனாபன தாஸஜன ஸமாகமதிந்த ||அப||

அரணோதயதெல்லெத்து ஆசமனக்ருத்யதலி
பரிசுத்தனாகி இஹபரகளிந்த |
எரடு வித சுகவீவ குருமத்வமுனிவரர
பரமமதபிடிது ஹரிசரிதாம்ருதவ சவிது ||1||

ஸ்னானவனு மாடி சங்கல்பபூர்வகதி சன்
த்யானகாயத்ரி குருமந்த்ர ஜபிஸி |
பானுகர்க்யவனித்து பரமாத்மனனங்க்ரிகள
த்யானவனு மாடி அத்யயன பாரகளிந்த ||2||

ஸ்ரீவாசுதேவன அடிகடிகெ நெனெனெனெது
பாவககெ ப்ராதர் ஆஹுதியனித்து |
பாவஞரலி சகல புராணகள கேளி
ஹூவு ஸ்ரீதுளசி வனகளனு சேவிசுத ||3||

சாவதானதி தந்த்ரஸாரோக்த விதியிந்த
தேவபூஜெய மாடி தேவேஷகே |
நைவேத்யகளன்னித்து நித்யத்ருப்தகெ வைஷ்வ
தேவ பலிஹரண ஆதிதிய பூஜெமாடுத்த ||4||

பரம ஹருஷதிந்த தேவப்ரஸாதவனு
வரமாத்ருபிதசோதர சஹித |
பரம சௌக்யதி பத்ஜ பாவனர ஒடகூடி
நரஹரே எனுத போஜனமாடி முததிந்த ||5||

சாயான்ஹ சமய சந்த்யான காயத்ரிஜப
ஸ்ரீயரசனங்க்ரிகள பூஜெயனு மாடி |
வாயு சகமுகத லாஹுதியித்து லக்ஷ்மீ நா
ராயணன காயனதி கொண்டாடி பொகளுத்தா ||6||

ஈ விததி தினகளனு களெது ராத்ரியலொந்து
ஜாவதனந்த சுகதி மலகி |
ஜாவஜாவதொளெத்து நெரெஹொரெயு கேள்வந்தெ
பாவன்னசரித ஹயவதனன்னு ஸ்மரிசுத்தா||7|| -- ஸ்ரீவாதிராஜர்

**மார்கசீர்ஷ சுத்த த்ரயோதசி**

**எச்சரிக்கை மணி**

மனிதனின் இந்த சிறிய பிறவியில், செய்யவேண்டிய செயல்கள் ஏராளம் உள்ளன. காலம் வீணானால் மறுபடி வராது. அப்படியிருக்கும்போது, நம் ஆயுளை / பிறவியை எவ்வளவு அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்ள வேண்டும் என்று எச்சரிக்கை மணி அடிக்கிறார் தாசர்.

நேரபொப்புளியந்தெ, நித்யவல்லவூ தேஹ
தாருணி தன ஸ்த்ரீகெ மருளாகபேட
நீரஜனாப ஸ்ரீபுரந்தரவிட்டலன
பாரி பாரிகெ நெனது சுகியாகோ மனுஜ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

காலத்தின் / நேரத்தின் மதிப்பு தெரியாமல், புத்திகெட்டுப் போய் திரியும் மனிதர்களுக்கு தாசர் சொல்வது:

தாஸு, பாரிசுதிதெ கேளி ஹரிதாசரெல்ல ||ப||
ஸ்ரீசன பஜனெய மாடத மனுஜன
ஆயுஷ்ய வ்யர்தவு ஹோயிது எந்து ||அப||

ஹாசு மஞ்சசுப்பத்திகெயல்லி ஹகலு இரளு
ஹாசர கத்தெயந்தெ ஹொரளி, ஸ்த்ரீயர கூடி
பேசரதெ நித்ய உருளி ஈ பரியிந்தலி மானுஷ ஆயுஸ்ஸு
வ்ருதா வ்ருதா ஹோயிது ஹோயிது எந்து ||1||

வார்திக்ய பால்ய கெலவு கால, விவேகவில்லத
புத்து மாந்த்யவு கெலவு கால, அஞ்ஞானதிந்த
நித்ரெயிந்தலி அதிலோல ஈ பரியிந்தலி காலன மனெயு
சமீபவாயிது ஆயிது எந்து ||2||

கழிந்த நேரம் மறுபடி வராது. உடனடியாக சாதனை வழியில் செல்லுங்கள் என்று எச்சரிக்கிறார். பிரகலாத ராஜர், 'துர்லபம் மானுஷம் ஜென்ம' என்று தைத்ய பாலகர்களுக்குக் அறிவுறுத்தினார்.

புரந்தரவிட்டலன பஜிஸி பதுகு எந்து - டம் டணடணவெந்து |
தாஸு பாரிசுதிதெ கேளி ஹரிதாசரெல்ல |

ஜகன்னாததாசரின் எச்சரிக்கை இது:
எச்செத்து இரு கண்ட்ய மனவே நம்ம அச்யுதனங்க்ரிய நெனகண்ட்ய மனவே ||

புரந்தரர் 'தாளி பாரத முன்ன தர்மவ களிஸிரோ' என்றார். இதற்கு முக்கிய காரணம் இதுவே:

ஈ தேஹதல்லி ஞான, ஈ தேஹதல்லி மான |
ஈ தேஹதல்லி நம்ம விஜயவிட்டலன காணோ || -- ஸ்ரீவிஜயதாசர்

**மார்கசீர்ஷ சுத்த சதுர்தசி**

**நீயில்லாமல் எனக்கு வேறு யாரும் இல்லை**

ஸ்ரீஹரியின் அத்யந்த பக்தர்கள், வாழ்க்கையில் எதையும் கேட்பதில்லை. அனைத்திற்கும் ஸ்ரீஹரியே காரணம் என்பர். இந்த

பக்தர்களின் மனது – அசலம் (சலனப்படாதது), தூய்மையானது மற்றும் எப்போதும் திருப்தியுடன் இருப்பது. ஸ்ரீஹரியைத் தவிர வேறைதையும் எப்போதும் கேட்கமாட்டார்கள். ஸ்ரீபுரந்தரதாசரின் ஒரு பாடல் இவ்வாறு:

நின்னன்னே பாடுவெ நின்னன்னெ பொகளுவெ
நின்னன்னே பேடி பேசரிசுவெ ரங்கய்யா
நின்னன்னெ காடுவெ நின்ன கால ஹிடிவெ
நின்ன தாம்பூலக்கெ கைய நீடுவே ரங்கய்யா
நின்ன கால ஹிடிவெ
நின்னந்தெ சாகபல்ல ஸ்வாமி இன்னுண்டே தேவ
நின்னாணே புரந்தரவிட்டல தம்மய்யா ||

அனைத்து பக்தர்களின் விருப்பமும் இதே ஆகவேண்டும். இன்னொரு இடத்தில் தாசர் 'பேடிதரே நம்மொடெயன பேடுவே' என்றார். இத்தகைய தாசர், தமது வாழ்க்கையையே ஸ்ரீஹரிக்கு அர்ப்பித்தார். இதுவே அனன்யபாவம் எனப்படுகிறது. இதற்கு என்ன காரணம் என்று விளக்கும் தாசர் – அந்த ஸ்ரீஹரி சர்வதந்த்ர ஸ்வதந்த்ரன் என்று அறிந்து அனுபவித்திருந்தார். ஸ்ரீஹரியை தாசர் கண்டது இவ்வாறு:

தரெ அஞ்சுதலிதெ கிரி அஞ்சுதலிதெ |
சரிசமுத்ரகளஞ்சே பெட்டாகுதிவே |
மருத பாவக அஞ்சே சரிஸி தஹிசுதிவெ |
மரபள்ளிகளு பலவீபுதலிவெ |
புரந்தரவிட்டலன நீனெந்த அரஸோ ||

'ம்ருத்யர்தாவதி பஞ்சம:' என்று உபநிஷத்தில் சொல்லியிருப்பதைப் போல ஸ்ரீஹரியின் ஆணை இப்படி இருக்கிறது. இன்னொரு இடத்தில் தாசர் சொல்லும்போது, அனைத்தும் நீயே தேவா என்று சரணடைந்தார்.

காவ தெய்வவு நீனே கொலுவ தெய்வவு நீனே
கைவல்ய பலதாத கேஷவனு நீனே
யாவ த்ருவக்கெ ஈ வைபவவனு காணெ
ராவணாந்தக ஸ்வாமி புரந்தரவிட்டலா ||

கடெ ஹாயிஸுவுது நின்ன பார
நின்ன நெனெயுவுது என்ன பார
...
ஹரியே நினகெ நா மொரெயிடுவெ
புரந்தரவிட்டலா நின்ன பாடுவே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

**மார்கசீர்ஷ பௌர்ணமி**

## விஷ்ணு மகிமைகள்

ஹரிதாச சாகித்யத்தில் முழுவதுமாக காணப்படுவது ஹரியின் மகிமைகளே. ஸ்ரீவாதிராஜரின் கிரந்தங்களில், இந்த விஷயம் மிகவும் அழகாக விவரிக்கப்பட்டு, விஷ்ணுவின் அன்பை சம்பாதிப்பதே முக்கியம் என்கிறார். சில விஷயங்களை பார்ப்போம்.

கால தொளெதவனொப்ப தோளிஸி கொண்டவனொப்ப
மௌளிய மேலே ஜலவ தரிஸிதவனொப்ப
பாலிஸுவ ப்ரதியொப்ப கொல்லுவ தளவாரனொப்ப
மூர்லோகதரியெ புட்டிஸித பிதனொப்ப
ஆலோசனெயல்லி பல்லவரிகெ சம்ஷயவில்ல
மாலெயன்னு மஹாலகுமி ஹயவதனனிகித்தளாகி |-- ஸ்ரீவாதிராஜர்

ஸ்ரீமூர்த்திரூபங்கள் விஷ்ணுவுடையதே. தன்னுடையதே ஆகி, பிரம்ம ருத்ராதிகளிலும் தன் ரூபங்களை வைத்து அனைத்தையும் நடத்துபவன் அவனே. பாற்கடலைக் கடையும்போது, மகாலட்சுமி, மஹாவிஷ்ணுவைத் தவிர வேறு யாரையும் ஏறெடுத்துப் பார்க்காமல், தான் அவனுடையவள் என்று அவன் கழுத்தில் மாலையிட்டாள். இவனே சர்வோத்தமன் என்று நிரூபித்தாள்.

'மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்சய' என்று ஸ்ரீகிருஷ்ணன் சொன்னதை, ஸ்ரீவாதிராஜர் தனது வாக்கினில் சொல்வது இப்படி:

என்ன சரணோதகவ ஷிவ பா
வன்னவெனுதாதரதி தரிஸித
நின்ன கருணாபலதலாவிதி வேத வோதிதனு |
என்னரசி ரமெ சகலகுணசம்
பன்ன சுரமுனிமான்ய ஸ்ருதி ததி

கண்யனெனுதலி மனதி மன்னிஸி முன்ன வரிஸிதளு ||

படைத்தல் முதலான அஷ்ட கர்த்ருத்வ ஸ்ரீவிஷ்ணுவினுடையது. அனைத்து ஜீவகோடிகளும் இவனது அதீனமே. குணபரிபூர்ணனான ஸ்ரீஹரிக்கு சமமோ, உத்தமரோ யாரும் இல்லை. ஆகவே ஸ்ரீமதாசார்யர் சொன்னது:

ஸ்மர்தவ்ய: சததம் விஷ்ணுர் விஸ்மர்தவ்யோ ந சாதுசித் |
சர்வே விதினிஷேதாஸ்யு ரேதயோரேவ கிங்கரா; ||

ஸ்ரீஹரியே உத்தமன் என்று வேதங்கள் சொன்னது இவ்வாறு: ‘அக்னிர்வை தேவானாமவம: விஷ்ணு: பரம:’. இன்னொரு இடத்தில், அனைத்தையும் கொடுக்கும் விஷ்ணுவே மோக்ஷத்தையும் கொடுக்கிறார் என்றது.

அஞ்ஞானாம் ஞானதோ விஷ்ணு: ஞானினாம் மோக்ஷதஸ்ச: |
ஆனந்ததஸ்ச முக்தானாம் ஸ ஏவைகோ ஜனார்தன: ||

இந்த ஸ்ருதி வாக்கியத்திற்கு ஸ்ரீவாதிராஜர் கூறிய விளக்கம் இது:

அக்னி தேவரொளதம மிக்க சுரர்களே மத்வமரு சலெஸ
ர்வக்ஞ விஷ்ணுவே பரம எம்பேவேத ப்ராஹ்மவே |
பக்கிஸிது குஜனர ஷிரங்கள சுக்கியெனிஸிது ஞான ஸஸியப
வர்கவேவெனு நானு நனகெணெயாரு ஜகதொளு ||

ஸ்ரீஹரி தனது சாமர்த்தியத்தை கூறியது இவ்வாறு:

நானு சத்குணபூர்ண வந்த்யனு ஹீனகுணதிம் ஜீவனிஷ்டனு
நானு சுக்ஞனு ஜீவனஜனு நானு முக்தனு ஜீவ பக்தனு

நானு ஜன்மவிதூர நானாயோனியலி ஜனிஸுதிஹ ஜீவனு
மாணு சலவனு நன்ன ஜனகன ஹெசுர ஹேளின்னு || -- ஸ்ரீவாதிராஜர்

நானதுக்க நிதானிசலு சதி தீனஜீவஸு துக்கசரிதனு |
நானு நன்னய சக்தியிந்தலெ தானவர மர்திசுவெ ஜீவரி
கானு சக்திய கொட்டதுண்டெல்லதொடெ ஜடகெ சம ||

இப்படி, உபநிஷத்களில் வரும் தத்வங்களை, ஸ்ரீஹரியின் மகிமைகளை ஸ்ரீவாதிராஜர் நமக்கு சொல்லிக் கொடுத்திருக்கிறார்.

அனைத்து சாஸ்திரங்களையும் படித்து பின் நமக்கு சொல்லிய ஸ்ரீவாதிராஜர்:
வாசுதேவன ஜனகெ பரதெய்வ காணிரோ

சிரியரஸன மொரெ ஹோகலு ஹரணவனு பொரெதகட
ஷரணரக்ஷனெம்ப பிருதுள்ள ஹயவதன
ஹரியல்லதெ பிரிதொந்து பரதெய்வவில்ல வந்த்ய || -- ஸ்ரீவாதிராஜர்

இத்தகைய தத்வங்களை தனது யுக்திமல்லிகா கிரந்தங்களிலும் தெரிவித்தார். இது சாஸ்திரங்களில் சொல்லப்பட்ட விஷயங்களின் - ஸ்ரீவிஷ்ணுவின் மகிமைகளின் சாரமே ஆகும்.

**மார்கசீர்ஷ பகுள ப்ரதமை**

**வாழ்க்கை அர்த்தமுள்ளதாகட்டும்**

மனவு ஸ்திரகொள்ளதவன ஸ்ரவணவேதகெ
நெனெபு நெலெகொள்ளதிரெ மனனவேதகெ
தனுவு கனவ காணத அனுபவவியாதகெ
தானி மஹீபதி ஸ்வாமிய காணத ஜனுமவேதகெ || -- ஸ்ரீமஹிபதிதாசர்

இங்கு தாசர் சில கேள்விகளை நம்முன் வைக்கிறார். இதற்கு நம்மிடம் பதில் உள்ளதா? என்று அனைவரும் கேட்டுக்கொள்ள வேண்டும். ஸ்ரவணம் என்றால் ஹரிகதா ஸ்ரவணம். இதன் மூலமாகவே மனதிலிருக்கும் அழுக்குகள் நாசமடைகின்றன. மனனம் என்றால் ஹரி நாமஸ்மரணை. ஸ்ரீஹரியின் சுத்தமான - தோஷங்கள் அற்ற குணம், ரூபம், செயல்களை நம் மனதில் வைத்து திரும்பத்திரும்ப சிந்திக்க வேண்டும். ஸ்ரீஹரியின் நாமஸ்மரணையை மனதில் எப்போதும் இருத்திக் கொள்வது. இங்கு நிதித்யாசனம் என்றால் - மெய்மறந்து மனதை ஒருநிலைப்படுத்துவது ஆகும்.

இதனுடன் ஸ்ரீஹரியின் மகாத்ம்ய ஞானத்தை அறிந்து, அதனை நம் வாழ்வின் ஒவ்வொரு நொடியிலும் சிந்தனைக்கு கொண்டு வந்து, அதன் அனுபவத்தினால் ஸ்ரீஹரியிடம் அதிகப்படியான பக்தியை செய்தவாறு அவனின் சாக்ஷாத்காரத்தை வேண்டி, அதனைப் பெறவேண்டும்.

இந்த அனைத்து செயல்களுக்கும் மூலம் – ஸ்ரவணம். இது குரு முகத்திலிருந்து துவங்கவேண்டும். அதற்கே ஹரிதாசர் 'ஸ்ரவண மாடிரோ நிரந்தர' என்றார். இது தெரிந்தால், தாசரின் கேள்விகளுக்கு பதில் கிடைக்கிறது. அலைபாயும் மனதை கட்டுப்படுத்துவதும் இதனால் சாத்தியம். 'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:' அனைத்திற்கும் நம் மனமே காரணம். அதற்கே ஸ்ரீபுரந்தரதாசர் கூறியது:

மனவ ஷோதிஸபேகு நிச்ச
தின தினதி மாடுவ பாப புண்யத வெச்ச || என்றார்.

ஸ்ரீவாதிராஜர் -- என்னமனத டொங்க தித்தய்ய கோபாலகிருஷ்ண – என்று வேண்டியது இதற்காகவே. இன்னொரு இடத்தில் – மனஸு நில்லது தேவ மாரனட்டுளிகென்ன – மனகாகி நீனே பாரோ மாதவ முராரி – என்றார்.

இதுவே அனைவரின் வேண்டுகோள் ஆகவேண்டும். அப்போதே மேலே சொன்ன அனைத்தையும் சாதிப்பதற்கு சாத்தியம் ஆகும்.

**மார்கசீர்ஷ பகுள த்விதியை**

**ஸ்ரீஹரியின் புகழ் / மகிமை**

ஸ்ரீஹரியின் புகழை சொல்லி முடியாது. ரமா பிரம்மாதிகளாலும் சொல்லி விளக்கமுடியாதது. அறியமுடியாத, பார்க்கமுடியாத அற்புத ஆளுமை. 'ஏகமேவ அத்விதீயம் பிரம்ம' என்று வேதங்கள் புகழும், நற்குணங்களின் கடல், ஸ்ரீஹரி. அனைத்து செயல்களையும் செய்பவன், அனைவரிலும் இருப்பவன், அனைத்து இடங்களிலும் இருப்பவன், சுதந்திரன் ஸ்ரீஹரி. இந்த தத்வத்தை மிக அழகாக – சுருக்கமாக தாசர் வர்ணிப்பது இப்படி.

நினகெ நினே ஐக்ய நினகே நீனே பேத

நினகெ நீனே மாத்ரு நினகெ நீனே ஸ்த்ரி
நினகெ நீனே புருஷ நினகெ நீனே கூட
நினகெ நீனே ரமண நினகல்ல தில்லலே
பினுகு தெய்வரிகுண்டு அனய விஜயவிட்டலா
நினகெ நீனே ஆளு நினகெ நீனே தொரெயோ || -- ஸ்ரீவிஜயதாசர்

சிந்திக்க முடியாத, விளக்கமுடியாத மகிமைகளை உடையவன் ஸ்ரீஹரி. ரமாதேவி

முதலானவர்களிடம் தானே ஸ்த்ரீ ரூபத்தில் இருந்து, தன் புருஷரூபத்தினால் போகிக்கிறான். ஸ்வரமணன். எதையும் எதிர்பார்க்காத நண்பன். அணுவிற்குள் அணுவானவன். பெரியதைவிட பெரியதானவன். அனைத்து நற்குணங்களின் கடல் ஸ்ரீஹரி. இன்னொரு சுளாதியில், தாசர்:

ஜட காஷ்டதொளகித்து நடெசுவவனு நீனே
கடல தெரெய ரபஸகயிசுவனு நீனே
கிடகெ ஹாருவ கடதல்லி கூடுவ நீனே
அடவிய ம்ருககளல்லி த்வனிகெய்சுவ நீனே
குடி கிரியொளு பேளெ ப்ரதி ஷப்தனு நீனே
கடெகெ சர்வஷப்த வாச்யனு நீனே
படிது பாலகெ ஹாலு குடிஸிதந்தெ என்ன
தடெயதெ கரெதந்தெ தவரமனெயந்ததி
கடுதெய்வ விஜயவிட்டல நின்ன நம்பலு
படவ பஹு செளபாக்யந்தன ஹனய்யா || -- ஸ்ரீவிஜயதாசர்

இங்கு தாசர், உபநிஷத்களில் அடங்கியிருக்கும் ஸ்ரீஹரியின் பல் வேறு ஸ்வரூபங்களின் ரகசியங்களைத் தொகுத்துக் கொடுத்தது இவரின் திறமையே என்று அறியவேண்டும். ஸ்ரீஹரியின் சர்வோத்தமத்வத்தை ஹரிதாசர்கள் தம் சிறிய கிருதிகளில் இப்படியாக விளக்கியிருப்பது மிகவும் அற்புதமாக இருக்கிறது.

**மார்கசீர்ஷ பகுள த்ருதியை**

**சிறந்த பக்தனின் லட்சணம்**

‘ந மே பக்த: ப்ரணஷ்யதி’ என்று ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது, தனது பக்தர்களுக்கு அவன் கொடுத்த அபயம். அதற்கே தாசர் ‘தன்னவர அரெகளிகெ பிட்டகலனு’ என்றார். ஞானிகள், தபஸ்விகள், ஸ்ரீஹரியிடம் நிலையான பக்தியை வைத்திருப்பவர்கள்.

போதி முச்சித கண்டதந்திப்பரு ||ப||
ஈ தரெய மேலே ஸ்ரீஹரிபக்தி ஜனரு ||அப||

ஷத்ரு மித்ரருகள சமவாகி எணிசுவரு
புத்ர மித்ர ப்ராத்ருகள நெச்சரு
யாத்ரெ தீர்த்தகளிகெ ஹோகுத்த ஸ்ரீஹரிய
ஸ்தோத்ரகள பாடி சாதனெ மாடிகொம்புவரு ||1||

கஷ்ட சௌக்யங்களனு ஹரிவரதகர்ப்பிஸி
கொட்டு கொட்டத்து ஹரிகொட்டனெம்புவரு
ஸ்ருஷ்டீஷ சிரிவிஜயவிட்டலன பதபத்ம
முட்டி பஜிஸி முக்தி ஸாம்ராஜ்ய படெயுவரு || -- ஸ்ரீவிஜயதாசர்

இந்த சிறந்த பக்தரின் சிந்தனை எப்போதும் ஸ்ரீஹரியைப் பற்றியே இருந்து, அனைத்தையும் அவனுக்கே அர்ப்பணிப்பவராக இருக்கின்றனர். இது தாசரின் வாக்கு:

நின்ன சித்தக்கெ பந்துதனு மாடு சர்வேஷ |
என்ன ஸ்வாதந்த்ர்ய பல மாத்ர உண்டே ஸ்வாமி ||
ப்ராணபதி பந்தரு மத்வமத பிடதிரி
ப்ராணத்ருத நாம நம்ம விஜயவிட்டலகர்ப்பிஸி ||

பகவத் பக்தர்களின் லட்சணங்களை ஜகன்னாததாசர் மிகவும் சிறப்பாக, யதார்த்தமாக விளக்குகிறார். ஸ்ரீஹரியின் பக்தர்களின் லட்சணம் இவ்வாறு இருக்கவேண்டும்.

அரியரோ நீனல்லதெ மத்தன்ய தெய்வர
மூக பதிரரந்திப்பரோ நோள்ப ஜனகெ
ஈஷிதவ்யரெம்போரே ஏகாந்த பக்தரு

கண்டகண்டல்லி விஷ்வரூபவ காம்பரு
பிடரு தம்ம ஸ்வதர்மகளேனு பந்தரு
நகுவரோ ரோதிசுவரோ நாட்யவாடுவரோ
ஜகன்னாதவிட்டலா நின்னவரேனு அன்யரோ ||

**மார்கசீர்ஷ பகுள சதுர்த்தி**
**என்ன செய்தால் என்ன?**

இந்த உலகில், திக்குதிசையின்று திரியும் மனிதன், மேம்படுவதற்காக, இந்த வாழ்வின் / பிறப்பின் ரகசியத்தை அறியவேண்டும். அதன் வழியை தெரிந்துகொள்ள வேண்டும். பகவந்தனைக் காணும் மர்மத்தை புரியவேண்டும். இது தெரியவில்லையெனில், செய்த அனைத்தும் வீண் என்பதில் எந்தவொரு சந்தேகமும் இல்லை. அதற்கே தாசர் சில விஷயங்களை நமக்காகக் கூறுகிறார். நம் பாடங்கள், நடவடிக்கைகள் ஆகியவற்றை அர்த்தமுள்ளதாக ஆக்கிக்கொள்வது எப்போது என்று ராஜர் சொல்வது இப்படி:

வேதசாஸ்திர ஓதிதரேனு
சாதுகளிகெ சோது நுடியதனக
ஷோதிஸி விரதகளாசரிஸிதரேனு
வேதார்த்த ஞானவே இல்லதனக
ஓதன ஷடுரஸ உண்டரே ஏனு
மாதவன அர்ப்பிசதனக
மேதினியல்லி திரிகிதரேனு
மாதவக்ருஷ்ணன நோடதனக || -- ஸ்ரீவியாஸராஜர்

நம் அனைத்து செயல்களும் நாம் ஏன் செய்கிறோம் என்ற அறிவு இருக்கட்டும் என்றார். எது தர்மம், எது அதர்மம் என்னும் மெய்யறிவு நம் சாதனையின் பலன்களை தீர்மானிக்கின்றன. இதையே ஸ்ரீகிருஷ்ணன் 'யோக: கர்மஸு கௌஷலம்' என்றான். நம் செயல்களை நல்ல முடிவைக் கொடுத்து, ஸ்ரீஹரியின் அன்பிற்குப் பாத்திரமாவதற்கு செயல்களின் உள்ளர்த்தத்தை அறியவேண்டும். ஆத்ம நிவேதனையுடன் சர்வ சமர்ப்பணா பாவம் தேவை. இதையே விஜயதாசர் ஒரு இடத்தில்:
ஸ்னான ஜபதபவு மௌனவனுஷ்டான

தான பர்வணெ புண்ய ஞான சுயாககளு
நானாகயாத்ரிகளு ஏனேனு கர்ம நி
தானதிந்தலி மாடே ஶ்ரீநாராயணன
த்யான நாமங்களு தா நுடியதிரெ காணரு நிர்வாண
அனாதினிதன விஜயவிட்டலனு
நீனே என்னதவனு ஞானியாதரேனு -- ஶ்ரீவிஜயதாசர்

ஹலவு வேதகளோதி ஹலவு கேளிதரேனு
இளியொளு மதியாகி சரிசலேனு
பலு விவேகமதி சததவாதரு தன்ன
ஒளகித்து நரஹரிய கௌெயனெந்தரியதெ
கலி மானவனு தர்மாவளிய நெசகிதரேனு
செலவு கதாக்ரஜ விஜயவிட்டலன்ன
சதினாது ஸ்மரிசதெ சம்சார ஹரவில்ல || -- ஶ்ரீவிஜயதாசர்

**மார்கசீர்ஷ பகுள பஞ்சமி**

**என்னைக் காப்பாற்று**

வாழ்க்கையின் ஒவ்வொரு நிலையிலும் கடமைகள் நம்மை கட்டிப்போடுகின்றன. எதையும் விட முடியாத சூழ்நிலை. இப்படி இருக்கையில் மனதை ஒருநிலைப்படுத்துவது எப்படி? இதுவே சம்சாரம். இந்த சாகரத்தில் மூழ்கித் தவிக்கும் நாம் யாரிடம் முறையிட வேண்டும்? இது மிகவும் சுலபம் என்கிறார் தாசர். யார் நம்மை காப்பாற்றவல்லரோ, யாருக்கு சம்சாரம் என்பது இல்லையோ, அவனை கைபிடிக்கவேண்டும். அவனே ஶ்ரீஹரி. இதனை அறிந்த தாசர், ஶ்ரீஹரியை வேண்டும் வழியை தெரிவிக்கிறார்.

ஹேஸிகெ விஷயங்களிகெ எரகுதிதெ என்ன மன
காஸியாதேனோ ஹ்ருஷீகேஷ நீ சலஹய்ய
வாசவார்சித குரு புரந்தரவிட்டலா நின்ன
தாசர சங்கதொளு இரிசென்ன அனவரத க்ஷேஷ களெயய்ய || -- ஶ்ரீபுரந்தரதாசர்

இன்னொரு இடத்தில் நீயே கதி எனக்கு தேவா, என்னைக் காப்பாற்று என்று வேண்டுவதை பார்க்கிறோம்.

படவரொளகெ என்னிந்தாரு படவரில்ல
கொடுவரொளகெ நின்னந்தயாரு கொடுவரில்ல
த்ருடபக்தி நின்னல்லி எனகெ கல்பிஸி
பிடதெ சலஹோ ஸ்ரீபுரந்தரவிட்டலா ||

'அன்யதா சரணம் நாஸ்தி த்வமேவ சரணம் மம' என்று வேண்டுவது நம் பழக்கம். பல உவமைகளின் மூலம் தாசர் தம் பாடலில் ஸ்ரீஹரியிடம் வேண்டுகிறார்.

கர்மடன கை நூல குக்கரிய தெரனந்தெ
சிக்கிகொண்டு காம க்ரோதாதிகளன்னு
ஹிக்கி ஹேருதலிவெ ஏகே நோடுதலித்யோ
அக்கடக்கட நின்ன தாசனல்லவெ நானு
சிக்கு பிடிஸி நின்ன பகுதிய தோரிஸோ
பக்கதொளகிட்டு சலஹோ புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'சாகி - சலஹுவ தேவ நீனிரலு நனகேதர பய' என்றதுபோல நீயே என்னை காப்பாற்றுபவன். கருணாமயி. ஆனால் அவனிடம் முறை யிடும் பழக்கம், விருப்பம் நமதாக வேண்டும். இதற்கு சரியான, எளிமையான வழியைக் காட்ட வந்தவர்களே ஹரிதாசர்கள்.

**மார்கசீர்ஷ பகுள சஷ்டி**

**நான் என்று சொல்வது தவறு**

நானு நன்னது எம்ப படமதி
மானவனு தினதினதி மாடுவ
ஸ்னான ஜப தேவார்ச்சனெயெ மொதலாத கர்மகள |
தானவரு செளெதொய்யரல்லதெ
ஸ்ரீனிவாசனு ஸ்வீகரிஸ து
த்தானெ பக்வ கபித்தபல பக்ஷிஸிதவோலஹுது ||
(ஹரிகதாம்ருதசாரம் 10-13)

நான், எனது என்னும் கர்வம், தற்பெருமை பேசுபவன் அதமன். என்றால், அவன் சாஸ்திரங்களின் பொருளை அறியாத அஞ்ஞானி. எந்த நற்செயல்களை செய்தாலும் அதன் பலனை அவன் பெற

மாட்டான். வாழ்க்கையில் துக்கங்களையே வரிசையாகப் பெறுவான். 'மமேத்யேவம் அமங்கலரூப: அபிமான: சர்வவியாபி துக்கஸ்ய காரணீபூத:' என்று சாஸ்திரங்கள் சொல்கின்றன. நான் என்று சொல்வதில் உள்ள தோஷங்களை ஸ்ரீவிஜயதாசர் விவரிக்கிறார்.

நானே நானே எந்து பேளுவ மனுஜரு
நானா மாதனெகள படுவனு அனுதின
தீன மந்தார சிரிவிஜயவிட்டலரேய
நீனே மாள்பவனெம்ப பக்தர கைபிட ||

நான் - நீ என்னும் சொல்வதன் உள் அர்த்தங்களை ஸ்ரீவியாஸ ராஜர் ஒரு உகாபோகத்தில் இவ்வாறு சொல்கிறார்.

ஆளித நீனு நின்னாளு நானு
தந்தெ நீனு நின்ன கந்த நானு
சரண்ய நீனு நின்ன சரணாகத நானு
தயாளு நீனு நின்ன தயக்கெ பாதுர நானு
நோவ நீடின்னு காவரில்லெந்து
ஸ்ரீகிருஷ்ண என்னனு காயபேகை தந்தே ||

பிரம்மாண்டத்தில் உள் / வெளியே இருக்கும் அனைத்தும் ஸ்ரீஹரியினுடையதே. படைத்தல் முதலான செயல்களை செய்பவன். நம்மிடம் செயல்களை செய்விப்பவனும் அவனே என்றபிறகு, நான், எனது, என்னால் என்பதற்கு அர்த்தமேயில்லை. சுயமாக எதையும் செய்யும் சுதந்திரம் / கர்த்ருத்வ ஜீவனுக்கு இல்லை.

பிதா மாதா சுஹ்ருத்பந்துர் பாதா புத்ரஸ்த்வமேவ மே |
வித்யாதனம் ச காமஸ்ச நான்யத் கிஞ்சித் த்வயா வினா ||
இதுவே உண்மை

**மார்கசீர்ஷ பகுள சப்தமி**

**ஸ்ரீநரஹரிதீர்த்தரின் ஆராதனை**

சசீதா மூலராமார்சா கோஷே கஜபதே: ஸ்திதா |
யேனானீதா நமஸ்தஸ்மை ஸ்ரீமன் நரஹரி பிக்ஷவே ||

வேதாந்த இதிகாச உலகில் இறுதியான பாஷ்யகாரர், த்வைத சித்தாந்தத்தை மீண்டும் நிர்மாணித்த, வாயுதேவரின் மூன்றாம் அவதாரம் என்று புகழ்பெற்ற ஸ்ரீமதானந்த தீர்த்தரின் சாக்ஷாத் சிஷ்யர் ஸ்ரீ நரஹரிதீர்த்தர். ஸ்ரீபத்பனாப தீர்த்தருக்குப் பிறகு சர்வக்ஞபீடத்தில் அமர்ந்த முனிபுங்கவர். இவரது இயற்பெயர் ஷ்யாமா சாஸ்திரி. இன்றைய அசாம் பகுதியைச் சேர்ந்தவரான இவர், அன்று மிகவும் புகழ்பெற்ற அறிஞராக இருந்தார். ஸ்ரீமதானந்ததீர்த்தரிடமிருந்து சன்யாசம் ஸ்வீகரித்து, ஸ்ரீ நரஹரி தீர்த்தராக பெயர் பெற்று, 12 ஆண்டுகாலம் அரசராகவும் ஆட்சி புரிந்தார். குருகளின் ஆணைப்படி, கஜபதியின் கருவூலத்திலிருந்து ஸ்ரீமூலராமசீதா பிரதிமைகளைக் கொண்டு வந்து குருகளிடம் சமர்ப்பித்தார். இப்படியே சிம்மாசனத்தின் மீதும் அமர்ந்து, பிறகு அந்த இளவரசனுக்கு ஆட்சிபீடத்தைக் கொடுத்து, திரும்பி வந்தார்.

ஸ்ரீமதாசார்யரின் கீதா பாஷ்யம் மற்றும் யமக பாரதத்திற்கு உரை எழுதி, அவரின் தச-பிரகரண கிரந்தங்களுக்கும் விளக்கவுரை எழுதினார். பேசுமொழியான கன்னடத்தில் கிருதிகளை உரைநடை ரூபத்தில் இயற்றி, ஹரிதாச சாகித்யத்தின் மூலபுருஷர் என்று பெயர் பெற்றார். வெறும் நான்கு பாடல்கள் மட்டுமே தற்போது கிடைத்திருக்கிறது. நரஹரி, யதுகுலதிலக, ரகுபதி என்னும் அங்கிதங்களை பயன்படுத்தியிருக்கிறார். இவரது பாடல்களே கர்னாடக பக்திப் பாடல்களுக்கு முன்னோடி ஆயின.

இதுவரை கிடைத்துள்ள பாடல்கள்:

திளகோ நின்னொளகெ நீனே மருளே |

இந்து மருளாதேனு நா இந்து மருளாதே |

எதுர்யாரோ குருவே சமர்யாரோ |
ஹரியே இது சரியே |
சரண சேவகனலி கருண பாரதின்யாகே ||

இப்படி, ஸ்ரீமதாசார்யரின் சாக்ஷாத் சிஷ்யராகி, கிருதிகளை இயற்றி, ஹரிதாச சாகித்யத்திற்கு ஸ்ரீகாரம் (பிள்ளையார் சுழி எனலாம்) போட்ட மகாத்மா ஸ்ரீ நரஹரி தீர்த்தர். இவரது வாழ்க்கையே மிகவும் சுவாரசியமானது. இவரது மூல பிருந்தாவனம், ஹம்பியில், சக்ர தீர்த்தத்தின் அருகில் உள்ளது.

**மார்கசீர்ஷ பகுள அஷ்டமி**
**ஸ்ரீகோபாலதாசரின் புண்ய தினம்**

கோபப்ரகர சங்காசம் கோபாலார்ய நதத்பரம் |
கோதேவ வந்த்யபாதாப்ஜம் கோபாலாக்ய குரும் பஜே ||

கோபால தாசராய நின்னய பாத
நா பொந்திதெனோ நிஸ்சய || -- ஸ்ரீஜகன்னாததாசர்

இது ஸ்ரீகோபாலதாசரின் மிகச்சிறந்த சிஷ்யர் மற்றும் பக்தரான ஸ்ரீஜகன்னாததாசரின் வாக்கு. இதுவே நம் அனைத்து பக்தர்களின் வாக்கும் ஆகும். 'க்ருபண வத்ஸல நின்ன கருணக்கெ உபமெ காணெயோ' என்றும் பாடினார்.

ஸ்ரீவிஜயதாசர் போன்ற சிறந்த குருவைப் பெற்று, ஸ்ரீஜகன்னாததாசர் போன்ற சிஷ்யரைப் பெற்று, தன் வீட்டையே தாசகூட ஆக்கி, தம் சகோதரர்களையும் ஹரிதாசர்களாக்கிய அற்புத ஜீவர் ஸ்ரீகோபாலதாசர். காயத்ரி மந்திரத்தின் சித்தியைப் பெற்ற இவரது வாழ்க்கை, ஹரிதாச பரம்பரைக்கே சிறந்த வழிகாட்டியானது. இவர் செய்த தியாகம் யாராலும் செய்யமுடியாதது. விலை மதிப்பற்றது.

அகதாதி த்ரிகாலக்ஞம் அகமார்த விஷாரதம்
த்யாகபோக சமாயுக்தம் பாகண்ணார்ய குரும் பஜே ||

பாதராயண விட்டலரின் வாக்கு இப்படியாக இருக்கிறது:

வைராக்ய ஹரிபக்தி விக்ஞானகள கொட்டு
கோரதுரிதங்கள தூரோடிஸி
ஸ்ரீரமணனங்க்ரிகள தோருவரு பிடதெ ஈ
சூரிகள நம்பிதவ தன்ய தன்ய ||

தாச சதுஷ்யரில் மூன்றாம் இடத்தைப் பிடித்து, ஹரிதாச சாகித்யத்தை வளர்த்ததில் முக்கியப் பங்காற்றியவர். சிஷ்ய பரம்பரையைப் பெற்று அவர்களையும் காப்பாற்றிய பெருமைக் குரியவர் ஸ்ரீகோபாலதாசர். தனது ஆயுளையே தானம் செய்த மஹாபுருஷர் இவர். இவரின் சகோதரரான தந்தெ கோபால் தாசரின் வாக்கு:

பரலு பக்தியவொளகெ நால்வத்தோருவ ஆயுவன்னித்தனு |
சுதே சுபாத்ரதி பிடிது ஹரியனு முததி ஸ்மரிசுத கொட்டரு ||

'மனுஜ ஜன்ம மஹா சுக்ருதத பல' என்று தாசர் கூறியது, நாமும் சிந்திக்கவேண்டியது. லௌகிக விஷயங்களில் ஈடுபட்டு, காலத்தை வீணடிக்கிறீர்கள் என்று எச்சரிக்கை விடுத்தார் தாசர். அதற்கே ஒரு இடத்தில், தம் குருவிடம் தாசர் கேட்டது:

சதத சன்மார்கத பதவனு தோரிஸி
கதியாகு தசப்ரமதி முனிராய ||

ஸ்ரீகோபாலதாசருக்கு, ஸ்ரீஹரியிடம், குருவிடம், தூய்மையான பக்தி இருந்தது. ஸ்ரீமதாசார்யரிடம் இவர் வேண்டியது இது:

நின்ன மத பொந்திஸு நின்ன சின்னய தரிஸு
நின்ன சாஸ்திரதொளென்ன முளுகாடிசு |
நின்னவரொளகிடிஸு நின்ன மூர்த்திய தோரிஸு

தம் குருவிடம் கேட்டது:

நீனு பிடியலு ஹரியு தானு பிடிதனு
நீனு முனிதரெ ஹரியு தானு முனிவா
நீனு இத்தரே ஹரியு தானு இருவா
நீனு பிட்டரே ஹரியு தானு பிட்டோடுவா ||

கோபாலதாசரைப் பற்றி இவரது சகோதரர் சொல்வது:

பக்தியலி இவர்யாரு சரியெம்ப | உக்திகுருகள வாக்யவு |
மந்தமதி நானிதரெ குணகளு | ஒந்தனாதரு அரியேனு |
எரடு விம்சதி வருஷக்கெ ஈ சரியவ மாடிதா |

பரம ஹருஷதி ஷ்வாஸ பந்திஸி | கருண மார்கதி தெரளிதா || -- தந்தெ கோபாலதாசர்.

பித்ருப்ராத்ரு குருசோதர | பரம சுஹ்ருது பந்து ப்ரிய ஷுபக | ஹிதவனுபதேஷ மாடி | என்ன துர்மதிய பிடிசுத பொரெதன || -- சீனிப்பதாசர்

ஸ்ரீகோபாலதாசரின் வாக்கினை நம் வாழ்க்கையில் பின்பற்ற முயற்சிப்போமாக.

திளிவனாகலி பேகு தனகிந்துத்தமரிந்த
திளிதாடுதிரபேகு தன்ன சமானிகரிந்த

திளிய பேளலிபேகு அனகிந்தவராரிகெ |

நின்ன கண்ண முந்தெ போப ஜீவரு கண்டு
இன்னு நினகெ நாசிகெ பாரதெ |
இன்னு முன்னெ நாளிகெம்போ கன்ன ஆஸெ
சன்னாகி பிடு கண்ட்ய கூளமனவே || --ஸ்ரீகோபாலதாசர்

**மார்கசீர்ஷ பகுள நவமி**

**சிறந்த பிரார்த்தனை**

ஜிதந்தே ஸ்தோத்திரத்தில், பிரம்மதேவர் ஸ்ரீஹரியிடம், நம் அனைத்து பிறவிகளின் தவறுகளை மன்னித்து அருளுங்கள் என்று சொல்லி, பிரார்த்தனை எப்படி செய்யவேண்டும் என்பதை நமக்குக் காட்டினார்.

க்ருஷம் க்ருதக்னம் துஷ்கர்மகாரிணம் பாபபாஜனம் |
அபராத சஹஸ்ராணாம் ஆகரம் கருணாகர ||

இந்த விஷயத்தையே ஸ்ரீவிஜயதாசர் தமது ஒரு சுளாதியில் ஸ்ரீஹரியிடம் வேண்டுவது இப்படி.

இரளு ஹகலு போகி பரரன்ன ஆஷ்ரயிஸி
ஒரலி ஒரலி நிந்து ஷரகனு மாரோட்டி

உரியொளு பதங்க பரதி பேளுவந்தெ
அரெமரெயில்லதலெ ஆர உரியொளகிளிவெ
அரிதேனு பலவோ, அரிவாணி ஹரிய
ஸ்மரணெகையதலெ பரிதாதனோ முந்தே
தரளன்னவகுணவ தரலாகது மனகெ
கருடத்வஜ விஜயவிட்டலனெ க்ருபெயிரலி ||

ஸ்ரீவாதிராஜர் ஸ்ரீஹரியிடம் மிகவும் அற்புதமாக தன் மனவோட்டத்தைச் சொல்லி, நமக்காக வேண்டுவது இப்படி:

ஹலவு ஜன்மகளல்லி பலு நொந்து பாயாரி
பளபளனெ திருகுதிஹனோ
சதி உதர போஷணெகெ தலெஹுளுகுனாயந்தெ
ஹலவு மனெ அலெயுதிஹெனோ
ஜலத மேலின குள்ளியுந்திப்ப ஈ தேஹ
நெலெயெந்து நெச்சிதிஹெனோ
ஜலஜனாபகெ நிம்ம மஹிமெயனு பொகளுவேனோ
சலுவ ஹயவதன காயோ தேவ ||

‘பேடிதரெ என்னொடெயன பேடுவே என்றதுபோல ஸ்ரீஹரியிடம் மட்டும் நம் சுக துக்கங்களை சொல்லி வேண்டிக்கொள்வது தேவையானது.

**மார்கசீர்ஷ பகுள தசமி**

**இப்படி ஆகவேண்டாம்**

அவனெ ஜீவாங்கித ப்ரீத நோடி
புவிகெ பாரவனு ஹரிகெ ஹகெயவனு ||ப||

இங்கு தாசர் கடுமையாக திட்டுகிறார். அவன் ஜீவன் என்று அழைத்துக்கொள்ளும் ப்ரேதம் என்று சொல்கிறார். அவன் இந்த பூமிக்கு பாரம். ஸ்ரீஹரியை த்வேஷிக்கும் என்றால் எதிரி என்று நினைக்கும் ஜீவன். ஒரு பிசாசு போல் – வேலைக்கு உதவாதவன். எதற்கு அப்படி அழைக்கிறார் என்றால் அதற்கும் பதிலைத் தருகிறார். நாமும் அப்படி ஆகிவிடக்கூடாது என்பது தாசரின் விருப்பம்.

ஹரிகதெகெ பேசுத்து ஹரடெயனு கேளுவவ
ஹரிய குண ஹொகள தொணபண்டு படிவன ।
ஹரி மரெது மலபாண்டவனு தும்பிகொள்ளவவ
ஹரிபடரெ நடெனுடிகெ சேரிசதவ ॥1॥

ஹரிப்ரியனாகதெ அதத்து ஜாருவவ
ஹரியவரி குணிசதெ தன களெவவ ।
ஹரிமாத்ரெ கஞ்சே பலவெல்ல களகொள்ளுவவ
ஹரிவிரதவ பிட்டிதர வ்ரத கொளுவவ ॥2॥

ஹரிபதாம்புஜவ ஜரிது ஹலவு நீர்குடியுவவ
ஹரியலாஞ்சன வில்லத செலுவிகெயவ ।
ஹரி ப்ரசன்னவெங்கடேசன பாதாப்ஜவ பிட்டு
ஹரி பரதெய்வனதெ தம சேருவவ ॥3॥
-- ஸ்ரீபிரசன்னவேங்கடதாசர்

பிறந்து வந்த ஜீவன், என்றைக்கும் ஒரு பிணம் என்று அழைத்துக் கொள்ளக்கூடாது என்றால், மேலே சொல்லப்பட்ட பட்டியலை சரியாக பின்பற்றுபவனாக இருக்கவேண்டும். முதலில் எந்த செயல்கள் தோஷம், எது தோஷமில்லை என்று அறிந்து, அவற்றை செய்யவேண்டும். எந்த செயல்களை செய்தாலும், மனதில் ஸ்ரீஹரியின் சிந்தனை இருக்கவேண்டும். அப்படி இருந்தால், ஸ்ரீஹரி மெச்சுவான். காப்பாற்றுவான். இதுவே சாஸ்திரங்கள் சொன்ன வழியாகும். அதற்கே ஒவ்வொரு வரியிலும் தாசர், ஸ்ரீஹரியை சொல்லியிருக்கிறார். அனைத்தும் அவனே, அனைத்திற்கும் அவனே.

அவன் இல்லாமல் எதுவும் இல்லை என்பதே தத்வம் ஆகியிருக்கிறது. ஸ்ரீஹரியின் கருணையைப் பெறுவது இலக்காக இருக்கவேண்டும். அதற்கே தாசர் – ‘ஹரி ப்ரசன்ன வேங்கடேசன பாதாப்ஜவ பிட்டு – ஹரி பரதெய்வனதெ தம சேருவவ’ - இப்படி இருப்பவன் ஜீவன் உள்ள பிணம் என்றார்.

**மார்கசீர்ஷ பகுள ஏகாதசி**

**ஈச–தாச பாவம்**

அணுரேணு த்ருணகளலி பரிபூர்ண நீனு
க்ஷண க்ஷணக்கெ அவகுண குகர்ம நானு
வாணியரசன பெத்த வைகுண்டபதி நீனு
தனு நித்யவல்லத பொம்பெயு நானு ||

ஹரிமுகுந்த நீனு | நரஜன்ம ஹுளு நானு
பரமாத்ம நீனு | பாமரனு நானு
கருடகமன நீனு | மருளு பாபி நானு
பரஞ்சோதி நீனு | திருகனு நானு ||

தீன நானு சமஸ்த லோகக்கெ
தானி நீனு விசாரிசலு மதி
ஹீன நானு மஹாமஹிம கைவல்யபதி நீனு |
ஏனு பல்லேனு நானு நெரெ சு
க்ஞான மூர்த்தி நீனு நின்ன ச
மானருண்டே தேவ ரக்ஷிஸு நம்மனனவரத ||

தாச தாசர மனெய தாசியர மகனாம |
சாசிர நாமதொடெய ரங்கய்யன மனெய ||

விஷ்வலோகேச விமலைக தேஜோமூர்த்தி
விஷ்வ உத்தர விஷ்வ ஞானரூப |
விஷ்வதொளு ஔஹொரகெ நீனில்லதெ பேரே
விஷ்வ நாடக சூத்ரதாரருண்டே ஹரியே ||

திருப்பதிய வாச ஸ்ரீவேங்கடேச நீனு
ஸ்மரிஸி நின்னய பாத பதுகுபவ நானு
பிருதுள்ளவ நீனு மொரெஹொக்கவ நானு
சிரிகாகிநெலெ ஆதி கேசவனே நீனு ||

இங்கு கனகதாசர் சொல்லியிருக்கும் எளிய மொழி, அனைவருக்கும் புரியக்கூடியதே. ஸ்ரீஹரிக்கும்

ஜீவருக்கும் இருக்கும் பேதம் (வேறுபாட்டினை) அறிந்தபோது மட்டுமே - உன்னதி / சத்கதி.

**மார்கசீர்ஷ பகுள த்வாதசி**

**ஹரிநாமமே நம் உயிர்**

ஹரிநாம லக்ஷ்மீகாணோ தாரித்ர்ய ஜனரிகெ
ஹரிநாம பாவனகாணோ துரித கனாவளிகெ
ஹரிநாம சஞ்சீவனவோ ம்ருத்யுப்ராய ஜீவிகளிகெ
ஹரிமூர்த்தி ரங்க விஜயவிட்டலரேய
ஹரியிந்த மனுஜகெ ஹருஷ ப்ரவாஹவென்னி || -- ஸ்ரீவிஜயதாசர்

'ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ரு கதி:' என்றார் ஸ்ரீமதாசார்யர். அனைத்தும் அவனே.

நாமவே காயுவுது நாமவே உளிவுது
நாமவே சர்வபவித்ர மாடுவுது
நாமவே கனதுரித சம்ஹாரமாடுவுது
நாமவே னெனெவந்தெ வஜ்ராங்கியிப்புது
நாமவே சகல பக்தஸ்தோமவ பாலிபுது
நாமவே நிந்தல்லி குளிதல்லி மஹபாக்ய
நாமவொந்து நெனெயெ விஜயவிட்டலன
தாமவெ ஆகுவுது தடெயதெ நமகெல்ல || -- ஸ்ரீவிஜயதாசர்

அனைத்துமே ஹரி நாமம் ஆனதால், அதற்கு இணை வேறொன்றுமில்லை. ஹரி என்றால் ஹாரி (ஓடி) போகும் பாவம். ஹரி என்பவருக்கு அனைத்தும் கிடைக்கும். ஹரி நாமத்திற்கு இணை இருக்கிறதா உலகத்தில்?

ஹரிய நெனெசித திவஸ சுபமங்கள
ஹரிய நெனசத திவஸ அவமங்கள
ஹரிய நெனெசித நிமிஷ ஆவாகலூ ஹருஷ
ஹரிய நெனெசத நிமிஷ துர்மானஸ
ஹரிய நெனெசித களிகெ முக்திய பளிகெ
ஹரிய நெனெசத களிகெ யமன பளிகெ
புரந்தரன ப்ரிய சிரிவிஜயவிட்டலனங்க்ரி
மரெயதலெ தா நித்ய நெனெதவனெ முக்த || -- ஸ்ரீவிஜயதாசர்

'ஹரிபத நெனெதவனிகெ நரகத பயவில்லா' என்றார் ஸ்ரீவாதிராஜர். ஸ்ரீபுரந்தரதாசர் 'கலியுகதொளு ஹரி நாமவ நெனெதரெ

**மார்கசீர்ஷ பகுள த்ரயோதசி**

**நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம்.**

குலகோடிகளு உத்தரிசுவுதோ ரங்கா' என்றார். 'ஹரிரேவ பரோ ஹரிரேவ குரு: ஹரிரேவ ஜகத் பித்ருமாத்ருகதி:' என்றார் ஸ்ரீமதாசார்யர். இதுவே அனைத்து சாஸ்திரங்களின் சாரம் ஆகும்.

புத்தி உள்ளவன் என்று சொல்லிக்கொள்ளும் மனிதன், தனது சொல், நடவடிக்கை, செயல்களில் ஒரே விதத்தைக் கடைப்பிடிக்க வேண்டும். இல்லையெனில், அது வெறும் டாம்பீகமே ஆகிவிடுகிறது. இதுவே சுய ஏமாற்றம். ஸ்ரீபுரந்தரதாசர் இதைப் பற்றி சொல்லி, அனைவரின் கண்களையும் திறந்திருக்கிறார்.

எல்லானு எல்லெனெம்புவிரல்ல | அவகுண பிடலில்ல || ||ப||
சொல்லிகெ ஷரணர கதெகள பேளுத |
அல்லத நுடியனு நுடியுவிரல்ல ||அப||

நமக்கு சமம் யாரும் இல்லை என்னும் எண்ணத்தை துர்குணம் என்கிறார் தாசர். ஸ்ரீமதாசார்யரின் நிர்ணயத்திற்கு எதிராக எதைச் சொன்னாலும் அது சரியாகாது.

காவியனுட்டு திருகுவிரல்ல | காமன பிடலில்ல |
நேம நிஷ்டே வ்ரத ஜாடுவிரல்ல | தாமஸ பிடலில்ல |
தாவொந்தரியதெ பரரனு திளியதெ |
ஸ்வானன குளியலி பேளுவிரல்ல ||1||

ஆசிரமம், நிலை இவற்றிற்கு தகுந்தவாறு நடக்கும் பலரைக் காண்கிறோம். காமக்ரோதங்களை ஜெயித்தவர்கள் குறைவே. அகத்தூய்மை இல்லாமல் செய்யும் செயல்கள் அனைத்தும் வீணே.

குருகள சேவே மாடிதிரல்ல | குருதாகலில்ல |
பரிபரி தேஷவ திருகிதிரல்ல | பொரெயுவரின்னில்ல |
அரிவொந்தரியதெ ஆகம திளியதெ |
நரக கோபதலி பீளுவிரல்ல ||1||

கோபத்துடன் எந்த வேலையை செய்தாலும் ஸ்ரீஹரி தரிசனம் தருவதில்லை. ஆகமங்களின் அத்யயனம் ஆகாமல் என்ன செய்தால் என்ன? நரகமே கிடைக்கும் என்றார்.

பிரம்மஞானிக ளெனிசுவிரல்ல | ஹம்ம பிடலில்ல |
சும்மனெ யாகவ மாடுவிரல்ல | சுள்ளனு பிடலில்ல |
கம்மனெ புரந்தரவிட்டலன பாதகெ |
ஹெம்ம பிட்டு நீவரகதி இல்ல ||3||

ஏதோ சிறிது சாஸ்திரங்களைப் படித்துவிட்டு, நான் பண்டிதன் என்று சொல்வதில் என்ன பலன்? 'வித்யா ததாதி வினயம்' என்னும் சொல்லிற்கு எதிரானதல்லவா அது? அனைத்திற்கும் உயர்ந்தவனான ஸ்ரீபுரந்தரவிட்டலனின் பாதங்களை வணங்கி வாழ்வதே சரியானதாகும். அதுவே சாஸ்திரங்கள் சொன்னதாகும்.

**மார்கசீர்ஷ பகுள சதுர்தசி**

**ஸ்ரீஹரியின் குணங்களைப் பாடுதல்**

நமோ நமோ அனந்த ஆதி அனந்த நி
கமபால விஜயவிட்டலனந்த ஸ்வாமி ||

நிராதார நிஸ்ஸங்க நிரமலாங்க
நிராமய நிர்தோஷ நீரத பாஸ
நிரஞ்சன நிர்குண நிராவரண
நீரஜரமண நிராஸ்ரயனெ நிர்விகல்ப
நிர்விகார விஜயவிட்டல
திருமங்களேஷ திருப்பதிவாஸ ||

விஷ்வமங்களனீத விஷ்வகாயனீத
விஷ்வகுடும்ப பாலகனீத ப்ரபுவீத
விஷ்வாதாரகனீத விஷ்வவிஷ்வனீத
விஷ்வேஷ்வரனீத விஷ்வசுகுணனீத
விஷ்வ நாடகனீத விஷ்வப்ரேரகனீத
விஷ்வகர்மனீத விஷ்வகாலனீத
விஷ்வத்ரவ்யனீத விஷ்வனீத
விஷ்வவியாப்தனீத விஷ்வபின்னனீத

விஷ்வமூருதி ஈத விலக்ஷணீத
ஸ்வாம்பரதொளகெ விஷ்வாசதலி ஸ்வே
தஸ்வன்ன மித்ரன்ன சுஸ்வரதலி பாடி
ஈஷ்வர நானெம்ப நஸ்சரமதி பிட்டு
பாஸ்வர சம்பூர்ண ஐஸ்வர்யனாகோ
விஷ்வகிரிவாஸ விஜயவிட்டல வெங்க
டேஷ்வர பக்தர வியாதிகள களெவ ॥ -- ஸ்ரீவிஜயதாசர்

ஞானவந்த குணானந்த । த்யானானந்த தானானந்த ।
மானானந்த மௌனானந்த । அனந்தானந்தானந்த ।
அனந்தவர்ண விஜயவிட்டல । அனந்த என்ன ப்ராணானந்த ॥

விஷ்ணு சஹஸ்ரநாமத்தில் வருவதைப்போல ஸ்ரீஹரியின் நாமாவளி போல இருக்கும் இந்தப் பாடலை தாசர் மிகச் சிறப்பாக இயற்றி நமக்குக் கொடுத்துள்ளார்.

**மார்கசீர்ஷ அமாவாசை**

## மனதைப் பற்றி தாசர்களின் ஆராய்ச்சி

சஞ்சலம் ஹி மன: கிருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் ।
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ சுதுஷ்டரம் ॥
(பகவத்கீதை 6-34)

கிருஷ்ணனைப் பார்த்து அர்ஜுனன் - 'சஞ்சலமான மனது, தேக இந்திரியங்களை அழிக்கிறது. இதனை வெல்வதற்கு சாத்தியம் இல்லை'. இதற்கு ஸ்ரீகிருஷ்ணனின் பதில் - 'அப்யாசேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே' - நிரந்தரமான பயிற்சி மற்றும் வைராக்கியத்துடன் மனதை கட்டுப்படுத்த முடியும். இந்த மனதைப் பற்றியும் ஹரிதாச சாகித்யத்தில் சொல்லப் பட்டிருக்கிறது.

பயிற்சியின் மூலம் ஸ்ரீஹரியிடம் மனதை ஒருநிலைப்படுத்த முடியும். அதற்கு அந்த ஸ்ரீஹரியையே வேண்டிக்கொண்டு அவனையே சேரவேண்டும் என்கிறார். ஸ்ரீவியாசராஜர், கிருஷ்ணனை வேண்டியது இப்படி:

பரம பாவன குணபூர்ணனெ நின்ன

சரண யுககளனு த்யானிசுத்த
நெரெஹொரெயலி மன ஹோகதந்ததலி
கருணிஸி நிலிஸோ சிரிகிருஷ்ண ॥ -- ஸ்ரீவியாஸராஜர்

இன்னொரு இடத்தில் இவரே – 'என்ன மன கண்ட கடெகெ எரகுதிதெ நின்னல்லி நிலிஸி காயோ' - என்று வேண்டுகிறார்.

'பே பே மனவெ நாசத தனுவெ ।
நீச வ்ருத்திய பிட்டு நெனெ கண்ட்ய ஹரிய' ॥

ஸ்ரீவாதிராஜர், மனதைப் பற்றி நன்றாக அறிந்த யோகி. சஞ்சல மனதை: 'என்ன மனத கொங்க தித்தய்ய கோபால கிருஷ்ணா' என்றார். இன்னொரு இடத்தில் – 'தனு ஜீர்ணவாயிது கரண என்னிச்செயொளல்ல । மனவென்ன மாது கேளதய்யா' என்றார். இதற்கான காரணத்தை அவரே கொடுக்கிறார். 'தேஹ ஜீர்ணவாயிது தனனேஹ ஜீர்ணவாகது' என்றார்.இறுதியில் ராஜர் வேண்டியது இது:

மனஸு நில்லது தேவ மாரனட்டுளிகென்ன ।
மனகாகி நீனெ பாரோ மாதவ முராரி ॥

ஸ்ரீகிருஷ்ணன் சொன்னது – 'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:' மனிதனை கட்டுப்படுத்துவதும் விடுவிப்பதும் மனமே. இது நினைத்தால் மட்டுமே எதையும் சாதிக்க முடியும்.

இதற்கே தெளிவான சரியான ஞானம், நற்செயல்களைச் செய்வது, குரு, பெரியவர்களின் முக்கியமாக

ஸ்ரீஹரியின் அருள் அவசியம் என்பர்.

இதையே புரந்தரதாசர் –
மனவ தண்டிஸி பரமாத்மன காணோ
கொனெகெ நின்னொளகெ நீ ஜாணோ முக்தி
நினகெ தோரில்லவு ஒந்து கேணோ ॥ என்றார்.
அர்ஜுனன் கேட்டதையே தாசரும், கிருஷ்ணனே ஆன விட்டலனிடம்:

மனவென்ன மாது கேளது மந்தஞானதி

தனுவினாஸெய பிடலொல்லது ॥ என்றார்.

இதற்கான காரணத்தையும் கூறினார்.
தேஹ சம்பந்திகளாதவரைவரு
மோஹபாஷதி கட்டிபிகிதிஹரய்யா ॥ என்றார்.

இந்த ஐந்து இந்திரியங்கள் நம்மை கட்டுப்படுத்தியிருக்கின்றன என்றார். அதற்கே தாசர் கூறியது - 'மனவ நிலிசுவுது பஹுகஷ்ட ஹரிதாடவந்த'. இதற்கான பரிகாரத்தையும் தாசரே சொல்கிறார்.

மனவெ சஞ்சல மரிய பிடு ।
நம்ம வனஜனாபன பஜனெய மாடு ॥

ஆவாவ காலக்கெ தேவனிச்செயிந்த
ஆவாவுது பரெ சுகவெ என்னு ।
ஸ்ரீவர ஆனாதி ஜீவர க்லுப்ததந்தெ
ஈவனு நிஜ ஸ்வபாவ பிடதெ நித்ய ॥

சஜ்ஜனர்களின் சமூகத்திற்கு தாசர் கொடுத்த செய்தி இதுவாக இருக்கிறது. இதுவே ஆத்மாத்ம யோகம் ஆகும்.

மனவ ஷோதிஸபேகு நிச்ச தின
தின மாடுவ பாப புண்யத வெச்ச ।
தர்ம அதர்ம வெங்கடிஸி அதர்மத நரகள பேர கத்தரிஸி
நிர்மலாசாரதி சரிஸி பரபொம்மமூருத்தி பதகமலவ பஜிஸி ॥

தாசரின் நேரடியான கேள்வி -- 'மனசுத்தி இல்லதவகெ மந்த்ரவ பலவேனு?' என்கிறார். அகத்தூய்மை இல்லாமல் செய்யும் செயல்கள் அனைத்தும் வீணே' என்கிறார். மனதைப் பற்றி ஆராய்ந்து கனகதாசர் கூறியது இது - நிர்மவில்லத மனுஜ தா கொளசெ ஹொாலஸு' என்றார். சுத்தமான நீரில் நம் பிரதிபிம்பம் தெரியும். அகத்தூய்மை இருந்தால், ஸ்ரீஹரியின் பிம்பம் அதில் காண்பதற்கு சாத்தியம். மனதைப் பற்றி ஸ்ரீவிஜயதாசர் கூறியது:

மனசு நில்லிசுவுது பஹள கஷ்ட
குணிசுவுது நிம்மொளகெ நீவு நெரெ பல்லவரு
மருள மன நிலிசுவுது சுரரிகளவல்ல

ஹாரி ஹாருவ மனசு நில்லிசலென்ன அளவல்ல
ஹரிதோடுவ மனசு நில்லிசல்லென்னளவெ
சிரியரஸ விஜயவிட்டல தானே பல்ல ||

தாசர் இதற்காக கொடுக்கும் தீர்வுகள் நமக்கானவை. அதை நாம் பின்பற்றி வாழவேண்டும்.

காமக்ரோதவ ஹளிது விஷாத ஸ்தோமகளனு தொரெது ரஜோ
தாமஸத புத்தி பிட்டு நேமனித்ய தீரிஸி |
ஸ்ரீமதானந்ததீர்த்தர கோமலாங்க்ரி கமலதலி
ஈ மனசு இட்டு நிஷ்காமதல்லே பகெய திளிது || -- ஸ்ரீவிஜயதாசர்

மனதின் விளையாட்டை அறிந்த ஸ்ரீகோபாலதாசர் நேரடியாக ஸ்ரீஹரியையே கேட்கிறார்.

ஈஷணத்ரயதல்லி எளெதென்ன மன
சர்வேஷனெ நின்ன கடெ மாடபஹுதோ || - என்கிறார்.

இவரின் தம்பியான வரதகோபாலதாசர் அந்த மனதையே கேட்கிறார்.

மனவெ துர்விஷயகளமனன மாடுதவென்ன
தணிஸி காடுதலிப்பியா மனவெ |
நினகெ நீ திளிதுகொ கன மஹிம கிருஷ்ணன
நெனெஸி சுகியாகலிபாரதெ ||

ஸ்ரீஜகன்னாததாசர் மனதிற்கு புத்தி சொல்லும் விதமாக பாடியது இப்படி:

மனவெ மரெவரேனோ ஹரிய பஹு |
ஜனுமகளல்லி பிட்டு பவணெகளரிய ||
ஹரிதாசனாகி நீ பாளோ குருஹிரி
யர பதகமலகெ நித்யனே பீளோ
நரர நிந்தாஸ்துதி தாளோ தேஹ
ஸ்திரவல்ல சம்சார பலுஹேய கேளோ ||

தாசர், மனதிற்கு எச்சரிக்கை விடுப்பது இப்படி:

மனவே ஈ ஜனும தப்பித மேலே ஆவ சா
தனவு நிஸ்சயவல்ல விஜயவிட்டலன்ன காணோ ||

ஸ்ரீஸ்ரீபாதராஜர் ஒரு உகாபோகத்தில் – 'என்ன மன விஷயங்களலி முணுகிதோ' என்று வேண்டியவாறு, இதிலிருந்து வெளிவந்து உன் பாதங்களை பிடிக்குமாறு செய் என்று வேண்டினார். இன்னொரு உகாபோகத்தில்:

அனந்தகாலதல்லி யாவ புண்யதல்லி
என்ன மன நின்னல்லி வரகிஸோ
என்ன மனவனு நின்ன சரணதொளொம்மெ
இட்டு சலஹோ ரங்கவிட்டலா ||

புரந்தரதாசரும் மனதிற்கு எச்சரிக்கை விடுக்கிறார். அது இப்படி:

எச்சரதிந்தலி நடெ மனவெ நடெ மனவெ |
முத்து அச்யுதன தாசர ஒடனாடு மனவெ ||

மனதிற்கு அபிமானி வாயுதேவர். பிறகு கருட, சேஷர் பிறகு ருத்ரர் அவருக்குப் பிறகு இந்திரன். இவர்களின் மனைவிகளும் அபிமானிகளே. மனோபிமானி, ருத்ரர் என்று பொதுவாக சொல்கிறோம். சிவனின் அருள் மிகவும் முக்கியம். அதற்கே தாசர்:

தையதாரேயந்தே மனசு கொடு ஹரியல்லி
கைலாசவாசா கௌரீஷ ஈஷ
மனசு காரணவல்ல பாப புண்யக்கெல்ல
அனலாக்ஷ நின்ன ப்ரேரணெ யில்லதே || -- ஸ்ரீவிஜயதாசர்

என்று வேண்டி, அனைத்து சஜ்ஜனர்களும் ருத்ரதேவருக்குப் பாத்திரராகி மனதை வெல்வதற்கு வேண்டினார்.

மனதைப் பற்றி ஹரிதாசர்கள் பாடிய சில பாடல்களை மட்டுமே பார்த்தோம். இதற்கு மேலும் படித்து, மனதைப் பற்றிய விஷயங்களை அறியவேண்டும். அப்போதே எதையும் சாதிக்க முடியும்.

**புஷ்ய சுத்த ப்ரதமை**

## ஸ்ரீஹரியின் செயல்கள்

ஸ்ரீவிஜயதாசர், தனது ஒரு சுளாதியில், ஸ்ரீஹரி, ஜீவர்களின் அனைத்து இந்திரியங்களிலும், எல்லா உறுப்புகளிலும், அந்தந்த தத்வாபிமானி தேவதைகளில் அந்தர்யாமியாக இருந்து, அவர்களை கட்டுப்படுத்தி, நடத்தி, ஜீவனின் அனைத்து செயல்களையும் செய்து செய்விக்கிறான் என்று ஸ்ரீஹரியின் செயல்களை விளக்குகிறார். நம் மேல் இருக்கும் ஸ்ரீஹரியின் கருணை இதுவே.

நுடிவனு பாவக மெல்லுவ வருணனு
பிடிதனு தக்ஷனு கேளுவ வாக்தேவ
நடெதனு ஜயந்த நோடுவ சூர்யனு
பிடதெ அப்பிகொண்ட அஹங்காரிக ப்ராண
ஒடனெ குஹ்யகளல்லி மனு மித்ர மனதல்லி
பிடகெ இந்த்ரனு இப்ப அஹங்காரதல்லி ருத்ர
அடி தொலகதல்லி இவரிந்தாகுதல்லிதெ
பொடவியொளகெ நினகாவதோ அதீன
கடலஷாயி நம்ம விஜயவிட்டலனல்லி
த்ருடபக்திய மாடு இதெ சாதன சித்த ||

இங்கு ஜீவரின் எந்த செயல்களில், தத்வாபிமானி தேவதைகள் இருந்து நம்மிடம் செயல்களை செய்விக்கின்றனர். அதாவது ஜீவனுக்கு, நானே அனைத்தையும் செய்கிறேன் என்னும் நினைவு என்றும் வேண்டாம் என்கிறார். அதற்கே தாசர் - ‘ஹரியே நின்னாதீன சகல சேதனவு’ என்றார். சர்வசக்தனாத பகவந்தன் அனைவரிலும் எப்போதும் இருந்து, சக்தியைக் கொடுப்பவனாக இருக்கிறான் என்பதை ஸ்ரீபுரந்தரதாசர் இவ்வாறு கூறுகிறார்.

தத்ர தத்ர ஸ்திதோ விஷ்ணு: தத்தத்ஷக்தி ப்ரபோதயன் |
ஏக ஏவ மஹாசக்தி: குருதீ சர்வமஞ்சஸா ||

ஸ்ரீஹரியின் செயல்கள் அபாரம். எண்ண முடியாதது. படைத்தல் முதலான எட்டு செயல்களை (அஷ்ட கர்த்ருத்வ) உலகத்தில் செய்கிறான். பிரம்ம, வாயு என அனைவரிலும் இருந்து செயல்களை செய்விப்பவனும் அவனே. எதையும் எதிர்பாராமல் உதவி புரியும் நண்பனாக இருப்பவனே ஸ்ரீஹரி.

**புஷ்ய சுத்த த்விதியை**

**ஸ்ரீஹரியின் பூஜை**

அரிதவரிகதி சுலப ஹரிய பூஜெ ||ப||
அரியதவ நிர்பாக்யதர லோகதொளகெ ||அப||

ஹைமாண்ட மண்டபவு பூமண்டலவே பீட
சோமசூர்யரே தீப பூருஹகளு
சாமரகளதி விமல வியோம மண்டல பத்ர
யாமாஷ்டககளப்ப தள பத்மவு எந்து ||1||

மளெய மஜ்ஜனவு திக்வலயங்களே வசன
மலயஜானிலவே ஶ்ரீகந்த தூப
ளெயொளகெ பெளெத தான்யகளெல்ல நைவேத்ய
தளதளிப மிஞ்சு கர்பூரதாரதியெந்து ||2||

நக்ஷத்ர மண்டலவே லக்ஷதீபாவளியு
தக்ஷிணோத்தர அயனகளெரடு பனகளு
வ்ருக்ஷவல்லிஜ சுபல புஷ்பகளொளகெ
லக்ஷ்மீ வக்ஷ வியாபகனாகி தானேபோகிபனெந்து ||3||

குடுகு சப்தசமுத்ர சிடலகோஷவே வாத்ய
பொடவிபரிகீவ கப்ப காணிகெ
உடுப பாஸ்கர மண்டலகளாதர்ஷகளு
நடெவ நடெகளு பிடதெ நர்தனவெந்து ||4||

யுக சதுஷ்டயவெ பரியங்க பாதகளப்த
பிகவ பட்டிகளு கந்தாய கசரு
ககன மேல்கட்டு சங்க்ரமணகள படவுகளு
பகவந்தகுப பர்ஹணகளு ஷட்ரதுகளெந்து ||5||
நாகவல்லிகளெ திவஸகளு கரணவே க்ரமுகெ
யோககளெ சூர்ண ராத்ரியே காம்ஷாக
போகவதீ ஜலவே கண்டூபோதக சுத்த
சாகரவெ பாதோதகவு விராட்ரூபகளெந்து ||6||

ஷாதகும்போதராண்டாந்தஸ்தரூப சம்

ப்ரீதியிந்தலி யஜிஸி மோதிபர
வீத சோகர மாடி சங்கைஸூதிஹ ஜக
ந்னாத விட்டல ஒலிது சர்வகாலதி ||7|| --ஸ்ரீஜகன்னாததாசர்

**புஷ்ய சுத்த த்ருதியை**
**நினைவு / மறதியின் நிலை**

நின்ன ஸ்ருதியெ கால விஸ்ம்ருதியே அகால
நின்ன ஸ்ம்ருதியெ புண்ய விஸ்ம்ருதியே பாப
நின்ன திளிதவ சர்வ திளிதவ
நின்ன அரியதவ நிரயபித்தவ
நின்னிந்தலி ஒந்து கர்ம மாடிதவ
இன்னு நானா விதியு தானு மாடிதவ
புண்யவெந்தது இதே பாவெந்தரு அதே
அன்யாசக்தி எம்புதெனகெ தோஷ
நின்னாசக்தியு எம்புதெனகெ புண்ய
என்ன யதனவேனு இன்னிதகாதரு
நின்ன கருணதிந்த இந்து ஆகலுபேகு
கன்ன தயாநிதி கோபாலவிட்டலா
அனந்தானந்த அகடித மஹாகடத || -- ஸ்ரீகோபாலதாசர்

அனைத்து சாஸ்திரங்களின் சாரத்தையே தாசர் இங்கு சொல்லியிருக்கிறார். உபநிஷத்தின் சாரத்தை மிகவும் எளிமையாகக் கூறுகிறார். எதை அறிந்தால், அனைத்தையும் அறிந்தாற்போல ஆகின்றதோ, அதுவே ஸ்ரீஹரி. இதையே தாசர் 'நின்ன திளிதவ சர்வ திளிதவ' என்றார்.

சுளாதியின் ஒரு பத்தியில் தாசர், பாவ புண்ணியம், தோஷம் தோஷம் இல்லாதவை, இப்படி பல விஷயங்களை விவரித்திருக்கிறார். ஸ்ரீஹரியிடம் தோன்றும் பக்தியே புண்ணியம் என்றும், தோன்றும் தோஷமே பாவம் என்றும் சொல்கிறார். அனைத்தையும்விட ஸ்ரீஹரியின் கருணை நம் மேல் விழவேண்டும். அதற்கே தாசர் ஒரு இடத்தில் சொல்வது:

பிசஜாக்ஷ நின்ன கருணரசவெம்ப மடுவினொளு |

சரீர தோயிது பிசஜ சரணவ தோரோ ‖ என்றார்.

ஸ்ரீஹரியையே ஏன் சொல்லவேண்டும்? என்பதற்கு அவரே கொடுக்கும் பதில்:

அபராத அனந்தமாடி நா மரெ ஹொக்கெ
அபார கருணி கோபாலவிட்டல காயோ ‖

சுருக்கமாக சொல்ல வேண்டுமெனில், ஸ்ரீஹரியின் நினைவு புண்ணியம். அவனை மறப்பதே பாவம். அதற்கே ‘ஸ்மரணே ஒந்தே சாலதே’ என்று பாடினார் தாசர்.

**புஷ்ய சுத்த சதுர்த்தி**

**தயை கூர்ந்து பார்ப்பாயாக**

பக்திலேஷத ப்ரசக்தி எனகில்ல | ஞானவெம்புதனேன காணே நா |
வைராக்யத வாருதெ சேரதெனகெ | ஆசார விசார எனகில்ல |
ஞானவெம்புதனேன காணே நா | அனொப்பனெ கிருஷ்ண நின்னவரொளு |
மானுஷபஷு தயெயிந்தென்ன நோடய்யா ‖ -- ஸ்ரீவியாசராஜர்

அபராத சஹஸ்ராணி க்ரியந்தே Sஹர்னிஷம் மயா |
தானி சர்வாணி ஹே தேவ க்ஷமஸ்வ புருஷோத்தமா ‖

தினந்தோறும் தேவபூஜை சமயத்தில் சொல்லும் மந்திரம் இது. ’எப்போதும் நான் அபசாரம் செய்துகொண்டே இருக்கிறேன். ஹே பகவந்தா | கருணாமயியான நீ, என் அனைத்து அபராதங்களையும் மன்னித்து என்னை காப்பாற்று’. இதற்கு என்ன காரணம் என்று ஸ்ரீவியாஸராஜர், தமது கிருதியில் விளக்குகிறார். இது அவர் சஜ்ஜனர்களுக்கு செய்த மிகப்பெரிய உபகாரம். நம்மிடம் இருக்கும் தோஷங்கள் என்ன என்று இதிலிருந்து தெரிகிறது. இங்கு பிறந்து வந்த நான், மேம்படுவதற்கு என்னவெல்லாம் வேண்டுமோ, அதெல்லாம் என்னிடத்தில் இல்லை என்கிறார்.

ஸ்ரீஹரியிடம் சுத்தமான, களங்கமற்ற நட்புடனான பக்தி தேவை. ’பக்த்யைக வஷ்ய: பிரபு:’ என்பது வாக்கு. இந்த பக்தி பிறப்பதற்கு ஸ்ரீஹரியின் மகாத்ம்ய ஞானம் அவசியம். அது என்னிடத்தில்

இல்லை. இப்படி அவனைப் பற்றிய ஞானம், பக்தி இல்லாதபோது, மற்றவைகளில் பற்றின்மை வராது. அப்படியிருக்கையில் வைராக்கியம் எப்படி வரும்? இப்படி இருக்கையில் சஜ்ஜனர் என்று எப்படி அழைத்துக்கொள்வது? நான் மனிதன்தானே? பசு இல்லையே? ஹே ஸ்வாமி, என் மேல் தயைகூர்ந்து உன் பார்வையை வீசு. ராஜரின் குருவான ஸ்ரீபாதராஜர், ஸ்ரீஹரியிடம் வேண்டுவது இது.

பரர பாகி காயிது ஹோயிது சம்சார
பரர குணகள துதிஸி ஹோயிது நாலிகெ
பரர ஹாரி ஹாரி ஹோயித்தெந்தென்ன மன
பரர காருணிகனெ நமோ ரங்க விட்டலய்யா ||

இந்த சிந்தனை, அனைவருக்குள்ளும், எப்போதும் இருக்கவேண்டும் என்று ராஜர் நமக்காக வேண்டிக் கொள்கிறார்.

**புஷ்ய சுத்த பஞ்சமி**

**மிகச் சிறந்தவை**

விதித த்ருவகளெல்ல விஷ்ணுவின ஹிந்தெ ||ப||
இதகெ நா பணிபணவ க்ருயாக பிடிவே ||அப||

சகல தீர்த்தகளெல்ல சாலிக்ராமத ஹிந்தெ
சகல வ்ருக்ஷகளெல்ல ஸ்ரீதுளசி ஹிந்தெ
சகல த்ரவ்யகளெல்ல வித்யாத்ரவ்யத ஹிந்தெ
ப்ரகட க்ரந்தகளெல்ல பாரதத ஹிந்தெ ||1||

மரகளெல்லவு மத்வமத சம்சாரத ஹிந்தெ
இதர வர்ணகளெல்ல விப்ரர ஹிந்தெ
விரதகளெல்லவு ஹரிவாஸர வ்ரதத ஹிந்தெ
அதிஷயத தானகளு அன்னதானவ ஹிந்தெ ||2||

உத்தம குணகளெல்ல ஔதார்ய குணத ஹிந்தெ
மத்தெ கர்மகளெல்ல மஜ்ஜனத ஹிந்தெ
நித்ய நேமகளு காயத்ரி ஜபதா ஹிந்தெ
சித்தஜனய்ய ஸ்ரீபுரந்தரவிட்டலா ||3||

ஸ்ரீபுரந்தரதாசர் இந்த பாடலில், உலகின் அனைத்து சாஸ்திரங்கள், அனைத்து செயல்கள், அனைத்து நிகழ்ச்சிகள் என அனைத்தையும் விட சிறந்தது எது என்று கோடிட்டுக் காட்டுகிறார். ஒவ்வொரு வாக்கியத்திலும் சொல்லியவாறு, அவை எவ்வளவு சிறந்தது என்று தெரிந்து கொள்ளலாம். அப்போதே தாசர் நமக்கு செய்த உதவி புரியும்.

பகவந்தனான மகாவிஷ்ணுவின் மகிமையைப் பற்றி தாசருக்கு இருக்கும் நிச்சய நம்பிக்கை, அது எவ்வளவு இருக்கிறது என்று கேட்டால், அதை ஒரு சவாலாக, கேள்வியாக நம்மிடமே கேட்கிறார். அதை நிரூபிக்கவும் செய்கிறார். இதுவே நிஜமான வைஷ்ணவ தீக்ஷை. கீதையில் ஸ்ரீகிருஷ்ணன், தனது சிறப்பு ரூபங்கள் எங்கெங்கு இருக்கின்றன என்பதை ஒரு பட்டியலிட்டுக் காட்டியிருப்பார். அதுபோலவே, இங்கு தாசர் பல்வேறு பொருட்களில் சிறந்தவற்றை பட்டியலிட்டுக் கொடுக்கிறார். இது மத்வமதத்தில் நிரூபிக்கப்பட்ட தத்வங்கள். இதை அறிந்து, பின் தாரதம்யமும் அறியவேண்டும். சிறந்த பொருட்களில் ஸ்ரீஹரியின் சான்னித்யம் அதிகமாக இருக்கிறது என்று அறியவேண்டும்.

**புஷ்ய சுத்த சஷ்டி**

**அனைத்தும் உன் ஆதீனத்தில்**

ஹரியே நின்னாதீன ஞானேந்திரியகளு
ஹரியே நின்னாதீன கர்மேந்திரியகளு
ஹரியே நின்னாதீன மன பஞ்சபூதாத்மகளு
ஹரியே நின்னாதீன மன சித்தாதிகளு
ஹரியே நின்னாதீன சகல சேதனவு
ஹரியே நின்னாதீன சகல சேஷ்டெகளு
ஹரியே நேமிஸித காரண என்ன ஷ
ரீரதொளகெ பரிதவாகிதெ ஹொரகித்த
சரகு பெலெ மாடிதந்தெ ஈ
சரகு தனவனித்து தும்பலில்ல என்ன
மரெது பிடுவுதல்ல பிருதுள்ள தெய்வனெ
குணிஸிதரெ குணிவெ நகிஸிதரெ நகுவெ
மணிஸிதரெ மணிவெ அளிஸிதரெ அளுவெ

உணிஸிதரெ உணுவெ உடிஸிதரெ உடுவெ
மனுஜவேஷனெ சிரிவிஜயவிட்டல நீனே
தனிஸிதரெ தணிவெ நெனெபித்தரெ நெனெவெ ‖ -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீஹரி ஒருவரே சர்வதந்திர ஸ்வதந்திரன் என்பது தத்வவாத. சகல ஜீவஜடாத்மக உலகமும் அவனுக்குக் கீழேயே. அனைவரும் அவன் சேவகர்களே. இதையே ஹரிதாசர்கள் அனைவரும் நம்பி, பின்பற்றி தம் கிருதிகளில் சொல்லியிருக்கிறார்கள்.

ஏக ஏவ பரோ விஷ்ணு: சுராசுர நிஷாசரன் |
த்ரிகுணானுகுணம் நித்யமனு க்ருஹ்ணதி லீலயா ‖

ஜீவர்களுக்கு அவர்களின் பூர்வஜென்ம வினைப்பயனுக்கேற்ப அவரவர்களுக்கு கதியைக் கொடுக்கிறான். ஹரிதாசர்கள், தம்மையே அர்ப்பித்துக்கொண்டு, அனைத்தும் நீயே என்று பாடினர். இதுவே உண்மை. இதுவே அனைவரின் அனுபவம். இதையே சிந்தித்து, பின்பற்றி நடக்கும் பக்தர்களுக்கு ‘நீனே மாள்பவனெம்ப பக்தர கைபிட’ என்று சொல்லி அபயம் அளித்தார். சர்வதந்த்ர ஸ்வதந்த்ரனான ஸ்ரீஹரியின் ஆதீனத்தில் இருக்கிறது இந்த உலகம்.

**புஷ்ய சுத்த சப்தமி**

## ஹரிநாமம் சொல்வதின் பலன்

ஹரிநாம ஹரிநாம மரிதராசி பீம
ஹரிநாம பொந்தக்கெ அனந்த பகெ கர்ம
சரிபாரவு காணோ இதகெ சம்சயவில்ல
ஹரிநாம தொரெது கர்மமாடலு தோஷ
கரகது கரகது மெட்ட போகது
ஹரிநாமதல்லி ப்ரேதியிட்டு கர்மவ
தொரெயெ பாபவில்ல பலவக்கு சுர
குரு விஜயவிட்டலரேய நாம
ஸ்மரிஸித மனுஜரிகெ ஸ்திரவென்னி ஞான பக்தி ‖
-- ஸ்ரீவிஜயதாசர்

ஹரிதாச சாகித்யத்தில் ஹரிநாமத்தின் மகிமைகள் அனைத்து இடங்களிலும் சொல்லப்பட்டிருக்கின்றன. ஹரிதாசரின் மூச்சே இந்த ஹரி நாமம்தானே? அவர்களும் ஹரி நாமத்தை சொல்லிய வாறு, மகிழ்ச்சியை அடைந்து, அனுபவித்து, மற்றவர்களுக்கும் அந்த ருசியைக் காட்டினர். ‘நாலிகெகெ பூஷண நாராயண நாம’ ஏனெனில் ஸ்ரீவாதிராஜர் ‘ஹரிநாம நெனெவங்கெ நரகத பயவில்ல’ என்றார். இந்த ஹரி நாமத்திற்கு இணையான வேறொன்று இல்லை. இறுதியாக, என்ன ஆனாலும், எப்படி இருந்தாலும், எப்படியாவது ஹரி என்று சொல்லுங்கள். சத்கதியைப் பெறுங்கள் என்றார் புரந்தரதாசர்.

அணகதிந்தாகலி டம்பதிந்தாகலி
எடஹிததாகலி பித்ததாகலி
தாகிததாகலி தாகில்லததாகலி
மரெது மத்தொம்மெ ஆகலி
ஹரிஹரி எந்தவரிகெ நரகத பயவேகே
யம பட்டண கட்டதரேனு
யம பட்டண பட்டபயலாதரேனு
ஹரிதாசரிகெ புரந்தரவிட்டலா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

இதன் சாரமாக விஜயதாசர் சொல்வது – 'ஆஷெயன்னு பிட்டு விசேஷ பக்தியிந்தலி தாசனெந்து கையமுகிது நீ சலஹு ஹரி எனலு, ஏஸேஸு ஜென்மத அக நாஷவாகுவுது'. சஜ்ஜனர்களுக்காக ஹரிதாசர்கள் சொன்ன ரகசியம் இதுவே.

**புஷ்ய சுத்த அஷ்டமி**

**எப்படி இருந்தாலும் காப்பாற்று**

ராகம்: மோகனம். தாளம். அட

ஆவரீதியிந்த நினென்ன சலஹுவி
ஸ்ரீவிபு ஹயவதன ||ப||
ஈ வித பவதலி இஷ்டு பவணெபட்டி
தாவரெ தளனயன ஹயவதன ||அப||

அங்கனெயரல்லி அதிகமோஹதிந்த

அங்க ஷ்ருங்காரமாடி
மங்களாங்கனெ நின்ன மஹிமெய பொகளதெ
பங்கக்கெ ஒளகாதெனோ, ஹயவதன ||1||

காமன பாதெய தாளலாரதெ கண்ட
காமினியரனு கூடி
நேமனிஷ்டய பிட்டு நின்னனு பஜிசுவெ
பாமர நானாதேனோ, ஹயவதன ||2||

ஹீனகுணகளனு ஹயமுக தேவனெ
நீனெணிசலதலெ காயோ
ஞானிகளரசனெ தயவித்து நின்னனெ
த்யானிசுவந்தெ மாடோ, ஹயவதன ||3||

ஒரு மனிதன் சம்சாரத்தில் பல பிரச்னைகளில் சிக்கி, தெளிவான ஞானத்தை அடையாமல், மனதை அயோக்ய விஷயங்களில் செலுத்தி கஷ்டப்படுவான். இதனால் பலவித தொந்தரவுகளில் சிக்கி அலைக்கழிக்கப்படுவான். இப்படிப்பட்டவர்களின் நிலையை ஸ்ரீராஜர் நம்முன் வைக்கிறார். ஆகக்கூடாதது ஆகும்போது மட்டுமே ஸ்ரீஹரி நினைவுக்கு வருவான். கருணாமயியான ஸ்ரீஹரி பக்தவத்ஸலன். நினைத்தால் காப்பவன்.

அப்போது ஸ்ரீஹரியின் பூஜை, தியானத்தில் தன் தேகம், மனதை நிறுத்தி வணங்குவான். இந்த நிலையை ராஜர் நம் முன் வைத்து, எச்சரிக்கை ரூபத்தில் சொல்லி, நமக்கு தகுந்த செய்தி அளிக்கிறார்.

**புஷ்ய சுத்த நவமி**

## கிருஷ்ணா கிருஷ்ணா என்று சொல்லுங்கள்

'சந்ததம் சிந்தயேனந்தம் அந்தகாலே விசேஷத:' என்றார் ஸ்ரீமதாசார்யர். எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனை இருக்கட்டும். அதுவும் இறுதிக்காலத்தில் இன்னும் அதிகமாக. இதையே ஸ்ரீவியாசராஜர்:

சந்ததத்லலி நின்ன நாம நாலிகெயல்லி
அந்த்ய காலதலி விசேஷவாகலோ கிருஷ்ண || என்றார்.

இதே சுளாதியில் இன்னொரு இடத்தில், எந்தவொரு நிலையிலும் ஹரி நாமஸ்மரணை இருக்கட்டும் என்றார்.

சாங்கேதவாகலி பரிஹாஸ்யவாகலி
அணகதிந்தாகலி டம்பதிந்தாகலி
எத்தாகலி மத்தெ பித்தாகலி
நமோ நமோ நமோ சிரிகிருஷ்ண எம்ப கோஷ
முகுதி கன்னிகெய மதுவெய வாத்ய கோஷ ||

மிகவும் அருகில் இருக்கும் ஸ்ரீகிருஷ்ணனை ஒரு முறை அழைத்தால் அவன் என்றும் நம்மை கைவிட மாட்டான்.

ஒம்மே பாடிதடம் ஒம்மே போகளிதொடம்
ஒம்மெ பேடிதடம் ஒம்மெ நோடிதடம்
ஒம்மெ சாரிதடம் மத்தொம்மெ கரெதடம்
நம்மாதனிவனெந்து கைய நீடுவனய்யா ||

நம் சிந்தனை இப்படி இருக்கட்டும்.
அனைவரும், அனைத்தும் உனதே ஆனதால், அது என்னுடையதாக இல்லையெனினும், உனக்கு அர்ப்பிக்கப்பட்டால், உனது கருணை ஒன்று இருந்தால் அது எனக்குப் போதும் என்றார்.

புத்ர மித்ர களத்ர வர்கதிந்த
தேஹ கர்ம ஞானேந்திரியகளிந்த
சித்த புத்தி மனோஹம்முகளிந்த
ப்ராணதிந்த தன்னாத்மதிந்த
நீனே ப்ரியனாகிஹெ சிரிகிருஷ்ண
நின்ன நெனெஹிகிந்த பேர பரமசுக உண்டே || - ஸ்ரீவியாசராஜர்

இறுதியில் எதுவும் இல்லாவிட்டாலும், கிருஷ்ணா என்று சொல்லுங்கள், உங்களின் துன்பங்கள் விலகும் என்று சஜ்ஜனர்களின் மேல் இருக்கும் தயையினால் கூறினார்.

கிருஷ்ண கிருஷ்ண கிருஷ்ணனெந்து மூரு பாரி நெனெயிரோ
சந்துஷ்டனாகி முகுதிகொட்டு முக்த பார ஹோருவனு || -- ஸ்ரீவியாசராஜர்

புஷ்ய சுத்த தசமி

## சத்வைஷ்ணவத்தின் மகத்துவம்

ஜனும ஜனுமதல்லி கொட கண்ட்யஹரியெ
மெரெவ ஊர்த்வபுண்ட்ர எரகாரு நாமகளு
கொரளொளு துலசிது வனமாலெ
மெரெவ சங்கசக்ர புஜதொளொப்புத நிம்ம
ஸ்மரிசுத்த ஹிக்குவ வைஷ்ணவ ஜென்மவ || -- ஸ்ரீவியாசராஜர்

வைஷ்ணவரின் சம்பிரதாயத்திற்கேற்ப, தினமும் சொல்லக்கூடிய வாயுதேவரின் ஸ்தோத்திரம் இது.

பிரம்மாந்தா குரவ: சாக்ஷாதிஷ்டம் தெய்வம் ஸ்ரிய: பதி:
ஆசார்யா: ஸ்ரீமதாசார்யா: சந்து மே ஜென்ம ஜென்மனி ||

ஒவ்வொரு பிறவியிலும் ஸ்ரீமதாசார்யரே நம் குருகளாக, நாம் அவரைப் பின்பற்றுபவர்களாக வேண்டும் என்றார். காரணம் 'ந ச மத்வ சமோ குரு:'. ஒரு இடத்தில் விஜயதாசர்: 'மத்வராயர கருண படெயதவ தரெயொளகெ இத்தரேனு இல்லதித்தரேனு?' என்று கேட்கிறார்.

சத்வைஷ்ணவன் என்று அழைத்துக்கொள்பவன், அறிந்து பின்பற்றவேண்டிய விஷயங்கள் இவ்வாறு:

ஹரி பரதேவதெ எம்ப ஞானவே ஞான
ஹரியடிகளனய்துவ முகுதியெ முகுதி
ஹரி விரஹித ஞான மித்யாஞான
ஹரி விரஹித பகுதி மாரின பகுதி
ஹரி மத்வாசார்யரெ குருகளு த்ரைலோகக்கெ
புரந்தரவிட்டலன தோரிதவராகி || -- ஸ்ரீபுரந்தரதாசர்

'தத்ராபி ஜன்மஷதகோடிஷு மானவத்வம் | தத்ராபி ஜன்மஷதகோடிஸு வைஷ்ணவத்வம்...' இது ஒரு பிரபல புராண வாக்கியம். இவ்வளவு கஷ்டமான, வெறும் பகவந்தனின் அருளினால் மட்டுமே கிடைக்கக்கூடிய பிறவி இந்த மனிதப் பிறவி. அதற்கே தாசர் 'சாதன சரீரவிது நீ தயதி கொட்டத்து

சாதாரணவல்ல' என்றார். கூடவே 'இத ஹானி மாடலிபேடி ஹுச்சப்பகளிரா' என்றும் கூறினார்.

'சேவிஸு வைஷ்ணவர, ஸ்வீகரிஸு வைஷ்ணவ மதவ' என்றார் ஸ்ரீவாதிராஜர். இந்த வாக்குகள் நம் தாரக மந்திரங்கள் ஆகவேண்டும்.

**புஷ்ய சுத்த ஏகாதசி**

## பிம்ப சிந்தனை

அனைத்து ஜீவர்களின் ஸ்வரூப தேகத்தில், செயல்களை நடத்தி / நடத்துபவனாக இருக்கும் மூர்த்தியே பிம்பரூபி பகவந்தன். இவனே நம் அந்தராத்மன். இவனின் தரிசனமே அபரோக்ஷ ஞானம் - பிம்பாபரோக்ஷம். இந்த பிம்பனின் உபாசனையே முக்கியமான சாதனை. இவரைப் பற்றி வியாச தாச சாகித்யத்தில், அதிகமாக சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு சுருக்கமாக காணலாம்.

ஸ்ரீவிஜயதாசர் 'பிம்போபாசனெ மாடு பகுதி பூர்வகதிந்த' என்றார். 'நினகெ ப்ரணவ மூருதி விஜயவிட்டல பொளெது நிலுவ'. ஸ்ரீபுரந்தரதாசர், தன் மனதில் பிம்ப-சிந்தனை செய்து, தியானத்தின் மூலம் பிம்பனின் தரிசனத்தைப் பெறவேண்டும் என்றார். இதை செய்வதன் வழியைக் கூறினார்.

கண்ணினொளகெ நோடு ஹரிய ஔகண்ணினிந்தலி । நோடு மூஜக தொரெய ।
ஆதார மொதலாத ஆரு சக்ர ।சோதிஸி பிடபேகு ஈஷண மூரு ।
சாதிஸி சுஷும்னா ஏரு அல்லி ।பீதிஸி நீ பரபிரம்ம சேரு ।
எவெய ஹாகதெ மேலெ நோடு முந்தெ ।தவகதிந்த வாயுபந்தன மாடு ।
சவிது சாதவ பான மாடு அல்லி ।நவவித பக்திலி நலினலிதாடு ।
அந்ததொளகெ ஆடுதானே பானு மண்டல । தொளு நாராயணனெம்புவகெ ।
குண்டலி துதியொளிதானெ நம்ம புரந்தரவிட்டல பாலிசுதானெ ॥

சாதன ஜீவி, தன் நித்யசுகத்தின் பலனைக் காண்பதற்கு, முதலில் தன்னுள் நோக்க வேண்டும். தன் இதயத்தில் இருக்கும் பிம்ப மூர்த்தியைக் காணவேண்டும். இது மிகவும் கடினம். ஞான,

பக்தியுடன் நடக்கக்கூடியது இது. ஆசன, பிராணாயாமங்களை செய்யவேண்டும். ஸ்வாதிஷ்டான, மணிபுர, அனாஹத, விஷுத்த, ஆக்ஞா மற்றும் சஹஸ்ரார என்பவை ஷட் சக்கரங்கள். இவற்றில் வீற்றிருக்கும் சக்தியை, மூலாதாரத்திலிருந்து சஹஸ்ரார வரைக்கும் ஏற்றவேண்டும். இந்த சக்தியே குண்டலினி சக்தி. இதை எப்படி செய்வது என்பதை: ‘பிம்போபாசனெய மாடு பகுதி பூர்வகதிந்த டம்பகவனெ தொரெது’ என்றார் ஸ்ரீவிஜயதாசர்.

தந்த்ரசாரத்தில் ஸ்ரீமதாசார்யர் கூறியதையே ஹரிதாசர்கள் முன்னெடுத்துக் கூறினர். அதையே இங்கு சுருக்கமாகப் பார்க்கிறோம். இதனை பெரியவர்களிடமிருந்து, கிரந்தங்களிலிருந்து அறிந்து, உபதேசம் பெற்று, சாதிக்க வேண்டும். இந்த வழியில் சென்றால் ஸ்ரீஹரியின் கருணைப்பார்வை கிடைக்கும்.

**புஷ்ய சுத்த த்வாதசி**
**ஸ்ரீஹரி இருக்கும் இடத்தில் இருக்கும் வாயுதேவர்**

’வாயும் வினா நைவ ஸ்திதேர்ஹரேஸ்ஸ்தா’ என்று வாயுபுராணம் சொல்கிறது. இதையே ஜகன்னாததாசர் ‘பரிசர நீனிரெ ஹரிதானிருவனு இரதிரெ தானிர’ என்றார். அது போலவே, சம்ஸ்கிருதத்தில், ஸ்ரீஹரி மற்றும் வாயுதேவர் இருவரும் ஹரி என்றே அழைக்கப்படுகின்றனர். ஸ்ரீபுரந்தரதாசர் - ‘ஹனுமன மதவே ஹரிய மதவு’ என்ற கிருதியில் - ‘ஹனும புரந்தரவிட்டலன தாச | புரந்தரவிட்டலனு ஹனுமனோள் வாச’ என்றார்.

பகவந்தனின் நேரடி பிரதிபிம்பரான வாயுதேவர் ஜீவோத்தமர். எந்த காலத்திலும் ஒருவரை ஒருவர் விட்டு இருப்பதில்லை.

ஹரி ஹனுமந்த ஒந்தே ஒந்து திளிதோ
ஹரி இத்தல்லி பவமான இப்பனெந்தோ
ஹரிய பஜிஸி பவமானன்னெ தொரெதரே
ஹரிபுரவாகம ஷத கல்பக்கோ || -- ஸ்ரீவிஜயதாசர்

பிராணதேவர், ஜீவரின் இதய-கமலத்திலிருக்கும் பிம்பமூர்த்தியின் கால்கள் அருகில் எப்போதும் இருந்து, ஜீவனின் மற்றும் தத்வாபிமானி தேவதைகளின் எல்லா செயல்களையும் நடத்துகிறார். இதை ஸ்ரீஸ்ரீபாதராயர்:

ஆவவனு தேஹதொளகிரலு ஹரி தா நெலெசிஹனு
ஆவவனு தொலகெ ஹரி தா தொலகுவ
ஆவவனு தேஹதொள ஹொரகெ நியாமகனு
ஆ வாயு நம்ம குல குருராயனு || என்றார்.

ஸ்ரீமதாசார்யர், தனது ஐதரேய பாஷ்யத்தில் - பகவந்தனின் சேவகரான வாயுதேவர், அவரைப் போலவே அனைத்து இடங்களிலும் வியாப்தர் என்கிறார். ஸ்ரீஹரி பித்ரு ஸ்தானத்தில் இருந்து, புத்ர ஸ்தானத்தில் இருக்கிறார் வாயுதேவர். 'ஹரிர்யதோத்ர வாயுரிதி ப்ரஸித்த:'. ஈசனான ஹரியின் தாசன் என்று சொல்லி, தேகத்தின் உள் மற்றும் வெளியில் இருந்து, த்ரிவித ஜீவர்களுக்கும் அவரவர்களின் சாதனைகளை செய்விக்கிறார் பிராணதேவர்.

ஹரியமதவே ஹனுமன மத | ஹனுமன மதவே ஹரிய மத || என்றார் புரந்தரதாசர்.

இந்த ஈச-தாசரில் இருக்கும் ஐக்யத்தை எடுத்துக் காட்டினார். இதையே குரு பிராணேச தாசர்:

குருப்ராணேஷவிட்டல பரனெந்து டங்குரவ குருமத்வமுனிராய |
சாரி சஜ்ஜனரிக்ஹிரி லோகவனு தோரிஸிதி குருமத்வமுனிராயா |
என்றார்.

**புஷ்ய சுத்த த்ரயோதசி**

**நான் என்பதை விடுவிப்பாயாக**

பிறந்த வந்த அனைத்து ஜீவர்களும் 'நான், எனது, என்னால்' என்னும் மாயையில் சுழல்கின்றனர். ஆனால், சில சமயம் நினைத்து பலிக்காமலும் போகிறது. அப்போது 'என்னால்' என்பது இல்லை என்று ஆகிறது. இந்த நிலைகளை தாசர் வர்ணிக்கிறார்.

நானே போகுதலிப்பெ நானே பருதலிப்பெ
நானே கொடுதலிப்பெ நானே கொள்ளுதலிப்பெ
நானே புஞ்சிஸுதலிப்பெ நானே பலவந்தனிப்பெ
நானே தனவந்தனிப்பெ நானே ஸ்ரேஷ்டனிப்பெ
நானே நானே எந்து பேளுவ மனுஜனு
நானு யாதனெகள படுவனு அனுதின
தீன மந்தார சிரிவிஜயவிட்டலரேய
நீனே மாள்பவனெம்ப பக்தர கைபிட || -- ஸ்ரீவிஜயதாசர்

நான், எனது, என்னால், அனைத்தும் எனது, எனக்காக - என்றெல்லாம் நினைப்பவர்கள் உளர். இவற்றை கவனித்த தாசர் நமக்குக் கொடுக்கும் அறிவுரை இது.

நானு எம்புத பிடு கண்ட்ய நின்ன
மானாபமானக்கெ ஹரியென்ன கண்ட்ய
ஞானிகளொடனாடு கண்ட்ய விஷய
ஜேனெந்து மெத்தரெ அது விஷ கண்ட்ய || -- ஸ்ரீவிஜயதாசர்

இன்னொரு இடத்தில் - நான், எனது - பற்றி சொல்லும்போது:

நானு நன்னது எந்து நானா கர்வதலி நுடிது நுடிது பலு
நானா யோனியல்லி சரிஸிதெ துக்கதலி ||

அத்யாத்மத்தில் (ஆன்மிகத்தில்) அல்லது லௌகீகத்தில் - இரண்டிலும் 'நான் எனது' என்பதற்கு தகுந்த மரியாதை கிடைக்காது. இதற்கே தாசர் எச்சரிக்கிறார்:

நானு நன்னது எம்புதாத காலகு பேட
நீனு நின்னது எம்ப திவ்ய மந்த்ரவெ இரலி
அனுகால நுடிசிதனு என்னிந்த
ஸ்ரீதந்தெ முத்து மோகனவிட்டலா || -- ஸ்ரீதந்தெமுத்துமோகனதாசர்

**புஷ்ய சுத்த சதுர்தசி**

**ஏகாந்த பக்தர்**

பகவந்தனின் ஏகாந்த பக்தர்களில் லட்சுமிதேவி பிறகு ருஜு கணஸ்தர்கள். எந்த காலத்திலும் எதையும் வேண்டாதவர்கள்.

'ஏகாந்தினாம் ந கஸ்யசித் அர்தே நாராயணோ தேவ:' புருஷார்த்தங்கள், மோட்சம் என எதையுமே நாராயணனிடம் வேண்டாதவர்கள். ஹனுமந்தனும் வேண்டியது - நாராயணனையே தவிர, வேறொன்றும் இல்லை.

ஏகாந்திகள ஒடெய லோகைகரக்ஷகா
நேக ஜனவந்த்ய நளினாக்ஷ |நளினாக்ஷ நின்ன பா
தக்க கைமுகிதெ தயவாகோ || -- ஜகன்னாததாசர்:

வாயுதேவர் தனது மூன்று அவதாரங்களிலும், ஸ்ரீஹரியின் அத்யந்த பக்தராகி, இடைவிடாத பக்தியினால், எப்போதும் சேவை செய்துவந்தார். பிரம்ம, சரஸ்வதி, பாரதியரும் கூட ஏகாந்த பக்தர்களே ஆவர். தாரதம்யத்தில் வரும் பிறர், தகுதியில் சிறிது குறைவு என்று சாஸ்திரங்கள் கூறுகின்றன. இத்தகையவர்:

நேச்சந்தி சாயுஜ்யமபி பலத்வேன ஹரிர்யதி |
ததாதி பக்திசந்துஷ்ட அஞ்ஞாத்வேனைவ க்ருஹ்ணதே ||

மேலும் தாரதம்யத்தில் ஸ்ரீஹரியின் அன்பு அருள் ஆகியவற்றை மட்டுமே விரும்பும் ஏகாந்த பக்தர்கள் யார் என்றால், சோமபானம் குடித்த தேவதைகள் மற்றும் அவர்களின் மனைவியர். ஜகன்னாததாசர், இன்னொரு இடத்தில், இந்த ஏகாந்த பக்தர்களைப் பற்றி விளக்குகிறார்.

இவரு முக்தியோக்யரெம்புவரு
ஸ்ரவண மனனாதிகள பரமோ
த்ஸவதி மாடுத கெளி நலியுத தர்ம காமார்த்த |
த்ரிவித பலகளபேக்ஷிசதெ ஸ்ரீ
பவனமுக தேவாந்தராத்மக
ப்ரவரதம சிஷ்டேஷ்ட தாயகனெந்து ஸ்மரிசுவரு ||
(ப்ருஹத் தாரதம்ய சந்தி #51)

மேலும் ஒரு பாடலில்:
ஈஷிதவ்யரெம்போரு ஏகாந்த பக்தரு
தேஷ காலோசித தர்மகர்மாசக்தரு ||

எப்போதும் எந்நேரத்திலும் பகவந்தனையே சர்வதந்த்ர ஸ்வதந்திரன் என்று, அனைத்து ஜீவராசிகளும் அவனின் சேவகர்களே என்று தெரிவிக்கிறார். இந்த உண்மையான ஞானத்தால் கர்த்ருத்வ என்பதைப் பற்றி தெளிவாக இருப்பர். இவர் 'கண்டகண்டல்லி விஷ்வரூபவ காம்பரோ'.

**புஷ்ய பௌர்ணமி**

**நவவித பக்தி**

ஸ்ரவணம் கீர்த்தனம் விஷ்ணோ: ஸ்மரணம் பாதசேவனம் |
அர்ச்சனம் வந்தனம் தாஸ்யம் சக்யம் ஆத்ம நிவேதனம் || -- பாகவதம்

ஸ்ரீவேதவியாஸர் பக்தியின் ஒன்பது விதங்களை இப்படி தொகுத்துக் கொடுத்திருக்கிறார். பக்தி சித்தாந்தம் என்றே அறியப் படும் ஹரிதாச சாகித்யத்தில், ஹரிதாசர்கள் நமக்காக இயற்றிக் கொடுத்த சாகித்ய பொக்கிஷத்தில், இவற்றின் விவரங்கள் உதாரணங்களுடன் இருக்கின்றன. இந்த ஸ்லோகத்தையே புரந்தரதாசர் ஒரு உகாபோகத்தில் இவ்வாறு சொல்கிறார்.

ஹரிஸ்ரவண கீர்த்தன ஹரி நாமஸ்மரண
ஹரிபாதசேவன ஹரிபூஜா வந்தன
ஹரிதாஸ்ய சக்யத்வ ஹரி காத்மார்ப்பண
ஹரிபக்தியே முக்திபத தத்வ
புரந்தரவிட்டலனெ பரமாத்ம சித்த
வரமத்வமத ஸ்ருதி ஸ்ம்ருதியொள் ப்ரசித்த ||

'அமலாபக்திஸ்ச தத் சாதனம்' என்று ஸ்ரீவியாசராஜர் கூறியதில், பக்தி மட்டுமே முக்திக்கு சாதனம் என்றார். ஏனெனில், பகவந்தன் 'பக்த்யைக வஷ்ய: ப்ரபு:' ஆகையால் ஸ்ரீமதாசார்யர் பக்தியின் லட்சணத்தை இவ்வாறு கூறுகிறார்.

மாஹாத்ம்ய ஞானபூர்வஸ்து சுத்ருட: சர்வதோவிக: |
ஸ்னேஹோ பக்திரிதி போக்தஸ்தயா முக்திர்னசான்யதா ||

சாதகர்களிடம் பக்தி செய்வித்து, அவர்களுக்கு சத்கதி வழங்குபவன் பகவந்தன். அந்த பகவந்தனைப் பற்றி இந்த ஒன்பது வித பக்தியின் மூலமாக அறிந்து கொள்வதே சாதனை என்கின்றனர். இவை பக்தியின் லட்சணங்கள். ஒவ்வொன்றின் சிறப்புகளையும் ஹரிதாசர்களின் வாக்குகளில் பார்ப்போம்.

ஸ்ரவண பக்தி:
ஸ்ரவண மனகானந்த வீவுது |
பவஜனித துக்ககள களெவுது | -- ஸ்ரீஜகன்னாததாசர்

இதுவே பக்தியின் முதல் படி. ஆனால் இதில் முதல், கடைசி என்று ஒன்றும் இல்லை. ஆகவே 'ஹரிகதா ஸ்ரவண மாடோ நிரந்தர' என்றனர்.

ஹரிகதா ஸ்ரவன மாடோ பாடோ -- ஸ்ரீபுரந்தரதாசர்
விஷால கர்ணகெ பூஷண விஷ்ணுகதெயு -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

கீர்த்தன பக்தி:
ஸ்ரீஹரியின் நற்குணங்கள், நாமஸ்மரணை, மகிமைகள் ஆகியவற்றை உச்சரிப்பது, பஜிப்பது 'கீர்த்தன பக்தி' ஆகும். 'லகுமிலோல தன்ன பக்தர மாடுதிஹ சம்ஸ்துதிகெ ஹிக்குவனு' என்று தன் பக்தர்களைக் காப்பாற்றுகிறான் ஸ்ரீஹரி.

மாது மாதிகெ கேசவ நாராயண மாதவ எனபாரதே -- ஸ்ரீவாதிராஜர்
நாலிகெகெ பூஷண நாராயண நாம -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

ஆ மொதலு க்ஷகாராந்த ஈ மஹா வர்ணகளெல்ல
ஸ்வாமியாத விஷ்ணுவின நாமவெந்து திளிதவகெ ஆனந்த ஆனந்த -- ஸ்ரீவிஜயதாசர்

கலியுகதொளு ஹரி நாமவ நெனெதரெ குலகோடிகளு உத்தரிசுவுது – ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்மரண பக்தி: பகவந்தனின் கீர்த்தைகளினால் ஸ்மரணை நம் மனதில் திடமாகிறது. ஸ்ரீஹரியின் ஸ்மரணை எப்போதும் இருந்தால் வேறெந்த கவலையும் இருக்காது. காரணம்:

வாசுதேவன குணசமுத்ரதொளிச பல்லவ
பவசமுத்ர ஆயாசவில்லதெ தாடுவனு || --ஸ்ரீஜகன்னாத தாசர்

என்ன ஹ்ருதய கமலதொளு நிந்திரோ ஹரியே || -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

ஸ்ரீவாதிராஜரும் சொன்னது இதையே:
அச்யுதனெ நா நின்ன ஹெச்சு பேடுவுதில்ல
கஷ்டகாலதல்லி ஹரியெம்ப ஸ்மரணேயே
ரக்ஷிஸோ லக்ஷ்மிரமண

ஹரிபதவ நெனெவங்கெ நடகத பயவில்ல || -- ஸ்ரீவாதிராஜர்

ஹரிய நெனெயிரோ நம்ம ஹரிய நெனெயிரோ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

த்யானவனெ மாடு பிம்ப மூருதிய || -- ஸ்ரீகோபாலதாசர்

சிரி நாராயண ஸ்மரணெ நெரெபாஹோதல்லதெ || -- ஸ்ரீகனகதாசர்

பாதசேவன பக்தி:
பகவந்தனின் மகிமைகளை தெரிந்துகொண்டு, நினைப்பதைப் போல, அவனை வணங்குவது சகஜமான செயல். 'ஆபாதமௌலி பர்யந்தம் ' என்றதுபோல பக்தனின் வேண்டுகோளுக்கு ஸ்ரீஹரி காட்சியளிப்பார். பகவந்தன மற்றும் பகவத் பக்தரின் பாதசேவனை என்றால் அவரின் நட்பு / பழக்கம் என்றாகிறது. பகவந்தன் இருக்கும் க்ஷேத்திரங்களை தரிசிப்பதும் இதில் அடக்கம்.

நின்ன சேவகரடிய சேவகனய்ய ஹரியே | -- ஸ்ரீகனகதாசர்

பரம வைஷ்ணவ குருகள பாதகெரகு || -- ஸ்ரீவாதிராஜர்

காலிகெ பூஷண ஹரியாத்ரெயு || -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

நீனித்த ஸ்தானதலி சகல புண்ய க்ஷேத்ர
நீனித்த ஸ்தானதலி சமஸ்த தாத்விகரு || -- ஸ்ரீவிஜயதாசர்

அர்ச்சன பக்தி:
ஸ்ரவண, மனன ஆகியவை ஆனபிறகு பகவந்தனை மனமுருகி அர்ச்சனை செய்யவேண்டும். சர்வவியாப்தனான ஸ்ரீஹரியை

சிந்தித்து, 16விதமான உபசாரங்களினால் அர்ச்சிப்பது பக்தி எனப்படுகிறது.

சாவதானை தந்த்ரசாரோக்த விதியிந்த தேவ பூஜெய மாடி || -- ஸ்ரீவாதிராஜர்

ஹேகெ மெச்சிசலி அர்ச்சிசலி நின்ன
நாகஷயனனெ நாரத வந்த்யனே தேவ || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பாவ புஷ்பகள தேவகெ அர்ப்பிசுவ பாவனெயனு || -- ஸ்ரீகோபாலதாசர்

வந்தன பக்தி:
பகவந்தனின் மாகாத்ம்யங்களை அறிந்து, நினைத்து, அவனே நம் கதி என்று சேவையை செய்தவாறு சாஸ்திரோக்தமாக அர்ச்சித்து, அவனின் காருண்யத்திற்கு பக்தியுடன் வந்தனை செய்வது பக்தி வகைகளில் ஒன்று. அவனிடம் கேட்பது இதுவே:

கையல்ய தாயக நாரசிம்மனே நமிபெ கருணிபுதெமகெ மங்களவ || -- ஸ்ரீஜகன்னாததாசர்

மொதலொந்திபெ நினகெ கணநாத || -- என்று வேண்டி, தாரதம்யத்திற்கேற்ப பகவந்தன் வரைக்கும் வேண்டினார்.

தாச பக்தி:
ஹரிதாச சாகித்யத்தில் நிரம்பி வழியும் பக்தி விதம் இதுவே. புறத்தில் ஸ்ரீஹரிக்கு சிரத்தாபக்தி பூர்வகமாக செய்யும் சேவை. ஈச-தாச பாவத்தின் விதை இதுவே. நிஜமான தாசன் என்று நினைப்பதற்கு ஸ்ரீஹரியிடம் செய்யும் நிரந்தர, இடைவிடாத பக்தியே தாச பக்தி. ஹனுமந்தன் ‘தாசோதம் கௌசலேந்த்ரஸ்ய’ என்று கூறினான். மகாலட்சுமியிடம் துவங்கி அனைவரும் ஸ்ரீஹரியின் சேவகர்கள் என்பது அனைவரும் அறிந்ததே.

சேவகனெனலோ நானு நின்ன பாதசேவெ நீடெலோ நீனு -- ஸ்ரீவாதிராஜர்
தாசன மாடிகோ என்ன -- ஸ்ரீபுரந்தரதாசர்
தாசோஹம் தவ தாசோஹம் -- ஸ்ரீஜகன்னாததாசர்

தனு நின்னது ஜீவ நின்னது -- ஸ்ரீகனகதாசர்
நானு நின்னாதீன கோபாலவிட்டல -- ஸ்ரீகோபாலதாசர்

சக்ய பக்தி:
ஜீவனின் உண்மையான நண்பன் ஸ்ரீஹரி. எதையும் எதிர்பார்க்காத நண்பன். எப்போதும் ஜீவர்களுடன் இருந்து, அவரவர்களின் செயல் களுக்கேற்ப சுக துக்கங்களைக் கொடுப்பவன். 'தேவவரேண்ய நெந்தாதரதி கரெயலு பந்தொதகுவனு தன்னவர பளிகெ'. பக்தர்கள் ஸ்ரீஹரியை நிந்தா ஸ்துதி ரூபத்திலும் வணங்குகின்றனர். நிரந்தரமான அன்பு செலுத்தும் பக்தியே சக்ய பக்தி.

சுகவாகலி பஹுதுக்கவாகலி சக நீனாகிரு பாண்டுரங்க -- ஸ்ரீவியாசவிட்டல
பக்தவத்ஸனெம்ப பிருது பொத்த மேலே பக்தராதீனனாகிரபேடவே || -- ஸ்ரீபுரந்தரதாசர்
பக்தரு வஞ்சிசுவ நீனு பட்டிட்டிருவ
முக்தி காந்திய கொடு சுகிபனோ ஸ்ரீகிருஷ்ணா || -- ஸ்ரீவியாசராஜர்

ஆத்ம நிவேதன பக்தி:
அனைத்து பக்தி விதங்களில் இறுதி இலக்கு - தன்னை ஸ்ரீஹரியிடம் சமர்ப்பித்துக் கொள்ளும் சிந்தனை ஆகும். நீ ஈசன், நான் உன் தாசன் என்பதே ஆத்ம நிவேதனம். 'த்வமேவ சர்வம் மம தேவ தேவ'.

தனு நின்னது ஜீவனு நின்னது ரங்க |
அனுதினதலி பாஹோ சுகதுக்க நினதய்யா || -- ஸ்ரீகனகதாசர்

இட்டாங்கே இருவேனு ஹரியே என்ன தொரெயே || -- ஸ்ரீஸ்ரீபாதராஜர்

நீனே கதி மதி ஸ்வாமி
நீனில்லதன்யத்ர தெய்வகள நானரியே || -- ஸ்ரீபுரந்தரதாசர்

ஸ்ரீபிரசன்னவேங்கட தாசரின் நவவித பக்தியைப் பற்றிய கீர்த்தனையை பார்க்கலாம். சுருக்கமாக சொல்லிய இந்த நவவித பக்தியைப் பற்றியும், இதனை பின்பற்றி வரும் சாதகனைப் பற்றி கூறிய பாடல் இது.

ஹரிய ஒம்பத்து பக்திய பல்ல தீர
மரளி சம்ஸ்க்ருதிய தாரிகெ ஹுட்டி பார
துராசார துஷ்க்ருதிகள கண்டு சேர
ஹிரியரொள் பிருனுடி ஜிஹ்வெகெ தார
ப்ரசன்னவேங்கட கிரிராய உதாரன
சரனாப்ஜ நிஷ்டெயங்கடியிட்டு தோர ||

சிந்தனை: இந்த ஒன்பது வித பக்தியை பின்பற்றும்போது, மனதில் இந்த சிந்தனை இருக்கவேண்டும். 'விஷ்ணோ: கீர்த்தனம்' என்றும் 'நாஹம் கர்த்தா ஹரி: கர்த்தா' என்றும். எனக்குள் இருந்து அனைத்தையும் நடத்துபவன் அவனே என்று நினைக்கவேண்டும். அனைத்து பக்திகளுக்கும் முன் 'விஷ்ணோ' என்று சேர்த்து படிக்க வேண்டும். நம்முள் இருக்கும் ஸ்ரீஹரி தன் ரூபங்களை வெளிப்படுத்தி, பஜிக்கும் ரூபங்களில் ஐக்யம் அடைகிறான். பக்தன் தன் அனைத்தையும் ஸ்ரீஹரிக்கு சமர்ப்பித்துக் கொள்ளும் அறிவே 'அனுசந்தானம்' (நற்சிந்தனை) எனப்படுகிறது.

ஸ்ரீபாதராஜரின் சாரமான வாக்கு:

பக்தி பேகு விரக்தி பேகு சர்வ
சக்தி பேகு முந்தெ முக்திய பயசுவகெ ||

**புஷ்ய பகுள ப்ரதமை**

**என்றும் இப்படி இருக்கட்டும்**

வியர்த்தவாயித்தெல்ல ஜன்மவு சார்த்தக ஆகலில்லா ||ப||

ஸ்ரீபுரந்தரதாசர் 'மானவ ஜென்ம தொட்டது' என்று சொன்னது நினைவுக்கு வந்தால், இந்த கனகரின் வாக்கு புரியும். ஒவ்வொரு நாளும் எழுந்தவுடன் இந்த வாக்கு நினைவுக்கு வந்தால் மட்டுமே, அன்று சிறிதாவது இந்த பிறவி எடுத்ததற்கான பொருளை அறிந்து, அதற்கேற்ப சத்கர்மங்களை செய்ய முடியும்.

அர்ததாஸெயலி ப்ருத்வியலி சுத்தி
மத்தனாகி பலு க்ருத்யகளனு மாடி ||அப||

'சர்வே குணா: காஞ்சன மாஸ்ரயந்தி' என்றது போல, வாழ்க்கையில் அனைத்திற்கும் பொருளே முதல் என்று அதற்காகவே பாடுபடுகிறோம். பொருளை சம்பாதிப்பதற்காக எதையும் செய்வதற்கு நாம் தயார். இதுவே வாழ்க்கையின் குறிக்கோள் என்று செய்யக்கூடாதவற்றை எல்லாம் செய்கிறோம். இதையே தாசர் வீண் என்கிறார். சாதனைக்கு தடை என்கிறார்.

ஹரிய நெனயலில்ல ஹருஷதி குருவ புட்டிதல்ல
பரம மோடதலி நிருத சங்க மாடி
குரு ஹிரியர தய தொரெயதெ சம்மனெ ||1||

கர்வத்துடன், எந்த நற்செயல்களையும் செய்யாமல் காலத்தைக் கழித்து, உத்தமர்களின் நட்பு வேண்டாமல், துர்ஜனரின் நட்பு வேண்டுகிறோம்.

ஏனு பேளலேனு எனகெ ஹீன பிடது முன்ன
ஷ்வானகிந்த பலு மானகெட்டு நா
தீனனாகி மனெ மனெகள திருகி ||2||

ஏலோ| என்னவென்று சொல்வேன்? 'தூ' என்றாலும் என்னை விடாத விலங்கு - நாய். என் வாழ்வு அதைப் போலவே ஆயிற்று. இப்படியாக வாழ்க்கை வீணாகக் கழிகிறது.

பாகவதா பாதக்கொந்தின பாகி நடெயலில்ல
ராகரங்கு பக்தி பாவதொளு
பீகி சன்னகேஷவனனு நெனெயதெ ||3|| -- ஶ்ரீகனகதாசர்

நம் வாழ்க்கை வீணாகாமல் நல்லபடியாக கழிவதற்கு, பின்பற்ற வேண்டிய நல்ல நடத்தை, நற்சிந்தனைகள், சஜ்ஜனர்களின் நட்பு / பழக்கம், ஶ்ரீஹரியிடம் பக்தி ஆகியவை மிகவும் முக்கியம் என்று கனகதாசர் தன் அனுபவத்தின் மூலமாக தெரிவிக்கிறார்.

**புஷ்ய பகுள த்விதியை**
**அனைத்துமே நமக்குக் கிடைக்கும்**

சந்ததி ஆகோது ராமாயணவ கேளலு
ஹலவு பாபஹரவு பாரத கேளலு

தந்து மாத்ர விஷ்ணுபுராண கேளலு
தத்வவிவேகவு பாஹோது
அந்தரவரிது பாகவதவ கேளலு
ஆஹோதெ ஞானபக்தி வைராக்யவு
சந்தத புரந்தரவிட்டலன சங்கீர்த்தனெ பாடலு
சகலவு பாஹோது சாயுஜ்யவு || -- ஸ்ரீபுரந்தரதாசர்

அனைத்து புராண இதிகாசங்களை அறிந்த அபரோக்ஷஞானி ஸ்ரீபுரந்தரதாசர். அவற்றில் அடங்கியிருக்கும் சிறந்த முத்துக்களை தம் மொழியினில் வர்ணித்து, அனைவருக்கும் வழங்கிய மகாத்மர். புராணங்களில் வரும் காட்சிகளை, அதில் வந்த பகவத் பக்தர்களின் கதையை, அதில் அடங்கியிருக்கும் தத்வங்களை பத-பத்யங்களின் மூலம் மக்களுக்கு தெரிவித்து, அவர்கள் மேம்படுவதற்கான வழியைக் காட்டிய புண்யாத்மர். இங்கு வேதவியாசர் இயற்றிய புராணங்களின் பல-ஸ்ருதியைச் சொல்லி, அவர் பேச்சுக்கு ஆதாரத்தைக் காட்டுகிறார்.

பாரத, பாகவத, ராமாயணம் முதலான கிரந்தங்கள் மிகவும் புனிதமானவை, பாராயணத்திற்கு உகந்தவை என்று அவற்றின் மகிமைகளை தாசர் வலியுறுத்துகிறார். இதனால் தாசரின் பாடல்களுக்கும் மதிப்பு பிறக்கிறது. அந்தந்த கிரந்தங்களைப் படிப்பதன் மூலம் கிடைக்கும் பலனை தெரிவிக்கிறார். அதனால் ‘தத்வவிவேகவு பாஹோது’ என்றார். அனைத்து கிரந்தங்களினால் புகழப்படும் ஸ்ரீஹரி காட்சியளிப்பான். அவனைப் பாடுவதன் மூலம் அனைத்துமே கிடைக்கும் என்று நம்பிக்கை அளிக்கிறார்.

புராணங்களை ஹரிதாசர்கள் மிகவும் புகழ்வதைக் காண்கிறோம். அதிலும், பாகவதத்தில் இருக்கும் பாலகிருஷ்னனின் கதை அனைவருக்கும் தெரிந்ததே. கதைகளின் மூலம் தத்வங்களை, வாழ்க்கையின் உள் அர்த்தங்களை, தான் மேம்பட்டு மற்றவர்களுக்கும் மேம்படும் வழியைக் காட்டினர் ஹரிதாசர்கள். இதற்கான பற்பல உதாரணங்களை ஹரிதாச சாகித்யம் முழுவதுமாக பரவியிருப்பதைக் காணலாம். இவை நமக்காக இயற்றப்பட்ட வாழ்க்கைக் கல்விமுறையாகும்.

ஸ்ரீஹரியையே நம்பினால் அனைத்தும் கிடைக்கும்.

நின்ன ஆஷ்ரயிசுவெ நிகமகோசர நித்ய |
பின்ன பிடதெ காயொ மனதிஷ்டவனீயா || -- ஸ்ரீபுரந்தரதாசர்

## புஷ்ய பகுள த்ருதியை
## வைஷ்ணவ த்வேஷம் வேண்டாம்

அனைவருக்கும் தெரியவேண்டியதே ஆன ஒரு முக்கிய விஷயத்தை, ஸ்ரீவிஜயதாசர் தெரிவிக்கிறார். தேவரபூஜை செய்வதற்கு முன் அனைவரும் சொல்லும் மந்திரம் - 'வைஷ்ணவ த்வேஷ ஹேதோன்மே பஸ்மசாத் குரு மாதவ' என்றும் வைஷ்ணவ த்வேஷம் வேண்டாம். தெரியாமல் த்வேஷம் செய்துவிட்டால், அதை மன்னித்து காப்பாற்று என்று வேண்டினார். இதைப் பற்றி தாசர் கூறியது:

வாசுதேவன நிஜ தாசன்ன மன்னிசதெ
த்வேஷ மாடிதவன க்லேஷக்கெ கடெ இல்ல
தேஷதொளகெ இதனெ எச்சித்து நடெதரெ
ஏனேனு ஜன்மக்கெ யள்ளினுது கேடில்ல
லேசாகி திளுவரு சித்தாந்த பல்லவரு || -- ஸ்ரீவிஜயதாசர்

மேலும், வைஷ்ணவர்களை நிந்திக்காதவர்களை ஸ்ரீஹரி காப்பாற்றுகிறான். ஆகையால், சஜ்ஜனர்களை திட்டுவது, த்வேஷிப்பது என்றைக்கும் தோஷம் என்று சொல்லி, அப்படிப்பட்டவர்கள் ஸ்ரீஹரியின் அவக்ருபைக்கு ஆளாவார்கள் என்கிறார்.

பூசுரனங்க்ரிய ரேணு தரிஸித மா
நீசனு ஷங்கிஸ ஷங்கிஸ எந்திகு
தோஷ அவகில்ல அவர பொந்தி இத்த
தாசனாகலி பேகு பவனமததொளித்து
ஈ சௌபாக்யவன்னு தூரகிதவன புண்ய || -- ஸ்ரீவிஜயதாசர்

இதிலிருந்து தெரிவது என்னவென்றால், ஒரு சஜ்ஜனர், ஸ்ரீமதாசார்யரின் மதத்தைப் பின்பற்றுபவர், ஹரி நாம கீர்த்தனைகளை பாடுபவர் என இவர்களை த்வேஷித்தால், தோஷித்தால், அது மிகவும் தவறு என்கிறார். இது எவ்வளவு

உண்மையான பேச்சு என்றால், நம் சமூகத்தில் சஜ்ஜனர்களை, ஞானிகளை, மடாதிபதிகளை, சஜ்ஜனர்களை மிகவும் கீழ்த்தரமாக பார்ப்பவர்கள் உண்டு. திட்டுவது, குறை சொல்வது பார்க்கிறோம். இது ஸ்ரீஹரிக்கு பிடிக்காத விஷயம் மட்டுமல்லாமல் இதற்கு தண்டனை உண்டு என்கிறார். அபரோக்ஷ ஞானிகளுக்கும் இத்தகைய தோஷம் இருக்கிறதாம். நாம் செய்யும் கிருஷ்ண த்வேஷத்தினால் புண்ணியம் அழிகிறது, பாவம் சேர்கிறது. எச்சரிக்கையுடன் இருப்போம்.

**புஷ்ய பகுள சதுர்த்தி**

**நாமாம்ருதம் நாக்கினில் இருக்கட்டும்**

கஷ்டதல்லிரலி உத்கிருஷ்டதல்லிரலி
எஷ்டாதரு மதிகெட்டு இரலி
கிருஷ்ணா கிருஷ்ணா எந்து சிஷ்யரு பேளுவ
அஷ்டாக்ஷர மஹா மந்திரத நாமவ
நாராயணா நின்ன நாமத ஸ்மரணெய
சாராம்ருதவு என்ன நாலிகெகெ பரலி || -- ஸ்ரீபுரந்தரதாசர்

பிறந்து வந்த மனிதனுக்கு சாகும்வரை சுக துக்கம் என இரண்டும் மாறி மாறி வருகின்றன. இந்த நிலையில், அனைத்தையும் கொடுத்த ஸ்ரீஹரியின் நினைவு வராது. இந்த சாதனை உடலைக் கொடுத்தவனின் நினைவு, அதாவது நன்றி தெரிவித்தல் தேவை. அதற்கே தாசர் கூறியது 'ஹரிஸ்மரணே மாடோ நிரந்தர' என்று.

'சுகவாகலி பஹு துக்கவாகலி சக நீனாகிரு பாண்டுரங்க' என்றது போல, அந்த சுகத்தின் நினைவு தினமும், ஒவ்வொரு நொடியும் - அதாவது எந்த நிலையில் இருந்தாலும் செய்யவேண்டியது நம் கடமையல்லவா? பல்வேறு கஷ்டங்கள், நம் வாழ்க்கையில் சாதாரணமாக வருகின்றன. இத்தகைய சந்தர்ப்பங்களில் ஸ்ரீஹரியின் நினைவு வரவேண்டும். 'உத்கிருஷ்டதல்லி' என்றால் மகிழ்ச்சியான சந்தர்ப்பங்களிலும் ஸ்ரீஹரியின் நினைவு வரவேண்டும். அதிகமான துக்கம் அல்லது சுகம் வந்த நிலையில் மனிதனின் புத்தி எங்கு சுழன்றாலும், ஸ்ரீஹரியின் நினைவு இருக்கவே வேண்டும்.

பவவெம்ப அடவியல்லி தாபத்ரயதி சிலுகி |
பயகொள்ளதந்தெ கெல்லுவுதக்கெ ஸ்ரீஹரிநாம |
கொரதாகி மத்துண்டே என்ன மனவ நின்ன
சரணதல்லிட்டு சலஹோ நமோ ரங்கவிட்டலா || -- ஸ்ரீபாதராஜர்

'சந்ததம் சிந்தயேனந்தம் அந்த காலே விசேஷத:' என்ற ஸ்ரீமதாசார்யரின் வாக்கு நினைவிருக்கட்டும். எப்போதும் ஸ்ரீஹரியின் சிந்தனை, நினைவு, தியானம் ஆகியவற்றை செய்தால், இறுதிக்காலத்தில் அதே சிந்தனை வரலாம். தகுதி உடையவர்கள், தந்திரசாரத்தில் சொல்லிய மந்திரங்கள், ஜபங்கள் செய்வது அவசியம் என்கிறார். (அங்கு சொல்லியிருக்கும் மந்திரங்களை ஒருமுறை குருவிடம் கற்று பின் ஜெபிக்க வேண்டும்). எந்த நிலையில் ஆகட்டும், ஜகன்னாததாசர் சொன்னதுபோல, 'மக்களாடிசுவாக...' ஸ்ரீஹரியின் நாமஸ்மரணை வாயிலிருந்து சகஜமாக வருமாறு பயிற்சி கொள்ளவேண்டும். மொத்தத்தில் 'க்ளேஷானந்தகள் ஈஷாதீன...' என்று அறிய வேண்டும்.

**புஷ்ய பகுள பஞ்சமி**

**தாமரை இலை தண்ணீர் போல...**

குறைந்த புத்தியுடைய நமக்கு ஸ்ரீவிஜயதாசர், வாழ்க்கையின் பொருளை மிகவும் அழகாக விளக்கும் நுடிகள், சுளாதியின் ஒரு பத்தியில்:

இரபேகு சம்சாரதொள் இல்லதிரபேகு
தருணி மக்களு மனெ பஷு பந்து பளக
பரிவாரதொடனெ ஆசக்தனாகி முளுகி
ஹரிதகாலக்கு நானாவிஷய லம்படதல்லி
சரிசுத்தித்தரு பலு சதுரதந்தனாகிரி
இரளு ஹகலு உதாசீனனாகி நோள்பரிகெ
சருவ கோடலெ இவனெந்து எனிஸலிபேகு
நிருத சௌபாக்ய பலுதாரித்ர்ய பந்தடரெ
சரிதியந்ததி சுகபூர்ணனாகிரலி பேகு
சிரனயன நாசாகர்ணவதன ஹஸ்தாங்க்ரி மிக்க
எரடு கோடிந்தாவ காத்ரத வியாபார
ஹரிப்ரக்ருதி தாத்விகரலில்ல நிந்து நிந்து

அரகளிகெ தொலகதலெ மாள்பரு பிடரெந்து
அரிது க்ஷண க்ஷணக்கெ ஹிக்கபேகு தன்னொளகெ
பரமக்லேஷ சந்தோஷ பரலாகி ஒந்தே சம
ஹரி தத்வாலக்கெ ஸ்வயோக்யதானுசார
பரிபரி கர்மகளு ஒளகித்து மாடிசுவ
அரெமரெ திளிதுசம்ஷய படபாரது
நெரெது மானவதொளு குளிதித்தரு மனசு
ஹரிபாததல்லி இட்டு தேனிசுத்திரபேகு
ஹொரகெ நோடிதரு துக்காணிகெ சல்லனெந்து
பரரிந்தெனிஸிகொண்டு நகபேகு ப்ரீதியல்லி
ஹரிகுருகள தாசரிகெ தத்த ப்ரான
தரதம்யதிந்தலி எணிபது மனதொளகெ
ஹரிஸ்மரணெ விக்னவாகதந்தெ ஆதன,
கருண படெயபேகு ஒந்தே பக்தியல்லி
மருததேவனமத பொந்தோ சததனிந்து
குருகளிகெ குரு நம்ம விஜயவிட்டலரேயன
ஷரணசங்கதல்லி மனதெகியதெ நில்லு || -- ஸ்ரீவிஜயதாசர்

புஷ்ய பகுள சஷ்டி

## கலியுகத்தின் மகிமை

கலியுகத்தின் நடவடிக்கைகளைக் கண்டு கனகதாசர், அதைப் பற்றி பாடியிருப்பது கவனிக்க வேண்டியது. இது நமக்கு அவர் அடித்திருக்கும் எச்சரிக்கை மணி. இன்றைய மக்கள் செய்யக்கூடாதவற்றையே செய்து, தம் இஷ்டப்படியே இருப்பவர்களாகின்றனர். அப்படி இல்லாமல், சரியான இலக்கினை அடைய முயலுங்கள் என்றார்.

சத்யதர்மகளெல்ல எத்த போதவோ காணெ
உத்தமர ஜீவனகெ தாரியில்ல |
நித்யதலி களவு வியபிசார உள்ளவரெல்ல
அர்த்தசம்பன்னராகி அனுபவிசுதிஹரு ||

அத்தெயே சோசெயாகி சொசெயே அத்தெயாகி
புத்ர பிதனாகி பித புத்ரனாகி |
மத்தெ கண்டனிகெ ஹெண்டதியெ கண்டளு ஆகி

வர்திசுவரய்ய தமகெதுரில்லவெந்து ||

வாவெவரசெயு தப்பி வைரிவர்கவு ஹெச்சி
தேவப்ராம்மண குருஹிரியரனு ஜரிது |
கேவலாதமரெல்ல சிரிமுததி சொக்கிதரு
காவராயெ சாம சஜ்ஜனரு ||

வேதவிப்ரரு தம்ம வ்ருத்தி ஸ்வாஸ்த்யவ களெது
ஆதாரவில்லதெ திந்து திந்து திம்புவரு |
கன்னகதகவ மாள்ப க்ராமண்யகள கலெது
குன்னிகளு ஹெச்சிதரு க்ரூர பணியந்தெ ||

ஹரிஹரர பூஜெகளு ஹகரணகளாதவு
உரியாரி சாமுண்டி சக்திகளிகெ |
குரிகோண நைவேத்ய ரூப தீபகளிந்த
பரம பக்திய மாடி பூஜிஸுவரய்யா ||

நடெவ கார்யகளெல்ல நுடியலென்னளவல்ல
ஒடெய நீனே பல்லெ கலியுகத மஹிமெ |
தடவ மாடலிபேட தாளலாரது லோக
ம்ருடன வைரிய பெத்த ஆதிகேசவனே ||

**புஷ்ய பகுள சப்தமி**

**மனது சுத்தமாக இருக்கட்டும்**

'மன ஏவ மனுஷ்யாணாம் காரணம் பந்த மோக்ஷயோ:' வாழ்க்கையின் வளர்ச்சி அல்லது வீழ்ச்சிக்கு முக்கிய காரணம் நமது மனது. அதற்கே வியாச தாச சாகித்யங்களில் முழுவதும், மனது எப்போதும் தூய்மையாக இருக்கவேண்டும் என்று வலியுறுத்துகின்றன. விஜயதாசர் மனதை எச்சரிக்கிறார்.

மனவே ஈ ஜனும தப்பித மேலே ஆவ ஸா
தனவு நிஸ்சயவில்ல விஜயவிட்டலன காணோ ||

களங்க மனதுடன் செய்யும் எந்த செயலும் வீணே ஆகிறது என்கிறார்.

மன சுத்து இல்லதவகெ மந்த்ரவ பலவேனு
தனு சுத்தி இல்லதவகெ தீர்த்தத பலவேனு
மிந்தல்லி பலவேனு மீனுமொசளெகளந்தெ
நிந்தல்லி பலவேனு நிலுகம்பதந்தெ
ஹொரகெ மிந்து ஒளகெ மீயதவர கண்டு
பெரகாகி நகுதிப்ப புரந்தரவிட்டலா ||

தற்காலிக விஷயங்களில் நம் மனது ஈர்க்கப்பட்டு, களங்கமடைகிறது. இந்த மனது பகவந்தனில் ஈடுபட வேண்டுமெனில், இந்த இந்திரியங்கள் அகத்தைப் பார்க்கவேண்டும். இத்தகைய மனதை கட்டுப்பாட்டில் வைக்க ஸ்ரீஹரியையே வேண்டுகிறார் தாசர்.

பேடுவ மனவேயோ நின்னனு காடுவ மனவீயோ
காடவாத ரஜோதவோ குணகள
ஒடிஸி ஷுத்தாத்மன ப்ரதிதின
பேடுவ மனவேயோ || -- ஸ்ரீவிஜயதாசர்

மேலும், சஞ்சலமான மனதை கட்டுப்படுத்துவதற்கு ஸ்ரீஹரியையே அதை தூய்மைப்படுத்துமாறு வேண்டுகிறார்.

காரண பந்தமோக்ஷக்கெ | கார்யகாரண நீனு (மனது)
ஹாரி ஹாரி கோகதெ | சேரிகொண்டு என்னொளு
பாரமார்தவ பயஸி | வீரவிஜயவிட்டலன்ன
சேரி சததலி நோடு | நோடு நோடு நோடு ||

இப்படியாக புரந்தரதாசர் 'மன சஞ்சலதி தபவமாடல ஷக்யவு' என்றார்.

**புஷ்ய பகுள அஷ்டமி**

**மான அவமானம்**

வாழ்க்கையில் மனிதனுக்கு மான அவமானம் வருவது சகஜம். சிலசமயம் உத்தமர்களுக்கு அவமானம், அதமர்களுக்கு சன்மானம் என நடப்பதையும் பார்க்கிறோம். இதற்கு என்ன காரணமென்றா லும், நம் சிந்தனை எப்படி இருக்கவேண்டும் என்பதை தாசர்

தெளிவாக தெரிவிக்கிறார். சாதகனுக்கு தன் சாதனையைப் பற்றியே எப்போதும் சிந்தனை இருக்கவேண்டும். தாசர் சொல்வது:

அபமானவாதரெ ஒளிது ।
அபரூப ஹரிநாம ஜபிசுவ மனுஜகெ ॥ -- ஸ்ரீபுரந்தரதாசர்

'சந்துன: விஷத: ஷஷ்வத: ...' என்ற குந்தியின் வாக்கு நினைவுக்கு வருகிறது. நமது நோக்கம் ஈடேறுவதற்கு துஷ்ட சமூகத்திலிருந்து விலகி இருப்பது முக்கியம். ஸ்ரீஹரியையே எப்போதும் நம்பியவனுக்கு மான அவமானங்கள் ஒரு பொருட்டே அல்ல. புரந்தரதாசர் ஒரு உகாபோகத்தில் இவ்வாறு சொல்கிறார்:

ஹங்கிஸி ஹங்கிஸி எனகெ ஹரி நாம நிலிசிதரு
பங்கிஸி பங்கிஸி எனகெ பயலாஸெ கெடிஸிதரு
கங்கெடிஸி காமக்ரோத பிடிஸிதரு...
மீஸலு மாடிதரு ஹரியெ நின்ன ஒடவெயிந்து...

இந்த அனைத்து அனுபவங்களையும் கண்ட தாசர் - மான அவமானங்களைப் பற்றி சொல்வது.

மானதிந்தலி அபிமான புட்டுவுது
மானதிந்தலி தப ஹானியாகுவுது
அபமானதிந்தலி தபவ்ருத்தியாஹுது
அபமானதி புண்ய சபலவாகுவுது
நானேனு மாடலி ஆரல்லி ஹோக
கானன சராராத்ய நீனிரலு
தீனரக்ஷக நம்ம புரந்தரவிட்டலனெ
ஏனு பேடெனகபமானதெ இரலி ॥

இறுதியாக, எனக்கு அவமானங்களே இருக்கட்டும் என்று வேண்டினார். இங்கு அவமானம் தரக்கூடிய செயல்களை செய்யவேண்டும் என்னும் தொனியும் இருக்கிறது. வாழ்க்கையில் என்ன ஆனாலும், மனிதன் தன் பணிவினை, சத்கதி பெறவேண்டும் என்னும் இலக்கை மறக்கக்கூடாது என்கிறார். தம் மனைவியைப் பற்றி தாசர் சொல்லும்போது:

ஆதத்தெல்லா ஒளிதே ஆயித்து - நம்ம

ஶ்ரீதரன சேவெகெ சாதன சம்பத்தாயித்து
என்னும் சிந்தனையை வெளிப்படுத்தினார்.

**புஷ்ய பகுள நவமி**

**புருஷ ரூபத்தின் சிறப்பு**

பிரம்மாண்டத்தின் உள்ளே மற்றும் வெளியே வியாபித்திருக்கும் பகவந்தன் நாராயணன். இவனையே புருஷோத்தமன் என்கின்றனர். 'அந்தர்பஹிஸ்ச தத் சர்வம் வியாப்த நாராயண ஸ்தித:' என்பது வேதவாக்கு. பகவந்தனின் புருஷரூபங்கள் மூன்று. இதனை ஜகன்னாததாசர்:

புருஷரூபத்ரய புராதன
புருஷ புருஷோத்தம க்ஷாக்ஷர
புருஷபூஜிதபாத பூர்ணானந்த ஞானமய |
புருஷசூக்தசுமேய தத்த
த் புருஷஹ்ருத் புஷ்கர நிலய மஹ
புருஷ ஜாண்டந்தரதி பஹிரதி வியாப்த நிர்லிப்த || (3-1)

புராதன புருஷ - மஹத் தத்வத்தை படைத்த ரூபம்
புருஷோத்தம - க்ஷராக்ஷர ஜீவர்களில் உத்தமன்
புருஷசூக்த பிரதிபாத்ய - அனைத்து ஜீவர்களின் இதயத்தில் இருப்பவன்

விஷ்ணோஸ்து புருஷாக்யானி த்ரீணி ரூபாண்யதோ விது: |
வ்ரமம் மஹத: ஸ்ருஷ்டி த்விதீயம் த்வண்டசம்ஸ்திதம் |
த்ருதீயம் தேஹினாம் தேஹே தானி ஞாத்வா விமுச்யதே ||

இந்த மூன்று ரூபங்களில் வாசுதேவன் மூன்று இடங்களில் இருந்து புருஷன் என்று அழைக்கப்படுகிறான். இந்த மூன்று ரூபங்களினால் மொத்த பிரம்மாண்டத்தின் சராசரங்களின் உள்ளே மற்றும் வெளியே நிலைத்திருந்து அனைத்தையும் தன் இஷ்டப்படி செய்துகொண்டிருக்கிறான். வேதத்தில் இருக்கும் புருஷ சூக்தத்தி னால் புகழப்பட்டு 'புருஷசூக்த சுமேயன்' என்று அழைத்துக் கொள்கிறான்.

பகவந்தனின் இந்த புருஷ ரூபம் விராட ரூபம் என்று அழைக்கப் படுகிறது. மஹத் தத்வத்திலிருந்து சத்புருஷார்த்தங்களை வெளிப்படுத்தினால், பிரம்மாண்டத்தின் உள்ளே ஸ்த்ரீபுருஷாதி தத்வங்களில் இருந்து அனைத்தையும் தானே நிர்மாணிக்கிறான். இன்னொரு புருஷ ரூபத்தில் இருந்து, ஸ்ரீஹரி மூன்று குணங்களைக் கொண்டு பாவ புண்ணியங்களை ஜீவனுக்கு கற்றுக் கொடுக்கிறான்.

த்ரிவித குணமய தேஹ ஜீவகெ
கவசதந்ததி தோடிஸி கா்ம
ப்ரவஹதொளு சஞ்சார மாடிசுதிப்ப சேதனர || (18-8)

ஸ்த்ரிபுருஷரில் புருஷோத்தம ரூபி ஸ்ரீஹரி 'ஷாசன' என்னும் பெயரில் மற்றும் 'அனஷன' என்னும் ரூபத்தில் ஜட-பிரதிமை களில் இருந்து, அனைவருக்கும் சாதனைகளை செய்வித்து இறுதி யில் தன் நிஜமான ரூபத்தையே காட்டி, சத்கதி கொடுக்கிறான்.

**புஷ்ய பகுள தசமி**

**பிம்ப உபாசனை - 1**

அனைவரும் நினைக்கவே வேண்டிய ஸ்ரீவியாசராஜரின் வாக்கு - 'அந்தரங்கதலி ஹரிய காணதவ ஹுட்டு குருடனு'. அந்தரங்கத்தில் இதய-கமலத்தில் நிலைத்திருக்கும் பிம்பமூர்த்தியே ஸ்ரீஹரி. 'சர்வேஷாம் பிம்பரூபோ ஹரி: ஏவ' - இது ஸ்ரீமதாசார்யரின் வாக்கு. இந்த பிம்பமூர்த்தியை காண்பதற்காகவே நாம் செய்யும் அனைத்து சாதனைகள், அத்யயனம், விரத, உபவாசங்கள். வியாச தாச சாகித்யத்தின் மூல உத்தேசமும் இதுவே. பகவந்தனின் சாக்ஷாத்காரம் (தரிசனம்) இதன் பலன். 'கிமலப்யம் பகவதி ப்ரசன்னெ ஸ்ரீனிகேதனே' இதற்கே வியாசராஜர்:

அந்தரங்கதலி பிரம்மானந்தனாகி நீனிரலு
அந்தகன பயவேனய்யா ஸ்ரீஹரியே || என்றார்.

அந்தரங்கத்தில் இருக்கும் பிம்பரூபியினாலேயே இந்த ஜீவி இருக்கிறான். காரணம், ஜீவன் அந்த பிம்பனின், பிரதிபிம்பனாக இருக்கிறான். பிம்பன் அனைத்தையும் செய்து, செய்விக்கிறான்.

ஜீவன் அ-ஸ்வதந்திரன் என்று இருக்கிறான். பிம்பமூர்த்தியின் அன்பைப் பெற, செய்யும் சாதனைகளுக்கு பிம்போபாசனை என்று பெயர். ஜகன்னாததாசர் கூறுவது:

நித்யதலி நெனெது க்ருதக்ருத்யனாகுவெ பிம்பமூர்த்தி
ஜகன்னாத விட்டலன தோருசலெந்து ‖ என்று குருவை வேண்டினார்.

பிம்பமூர்த்தியை காணும், உபாசிக்கும் வழிமுறைகளை மிகச் சிறப்பாக புரந்தரதாசர் விளக்குகிறார். வெளியில் பார்த்திருக்கும் இந்திரியங்களை உள் நோக்கித் திருப்பி, பிம்பமூர்த்தியை காணவேண்டும். இதையே:

கண்ணினிந்த நோடு ஹரிய ஔ
கண்ணினிந்தலி நோடோ மூஜகத தொரெயெ ‖

இந்த பிம்போபாசனையே ஜீவனின் இலக்கு. மோக்ஷ சாதனை. தாசர் தமது கிருதியில் மேலும்:

ஆதார மொதலாத ஆரு சக்ர...
குண்டலி துதியொளிடானே நம்ம புரந்தரவிட்டல பாலிசுதானே ‖

என்று சொல்லி இன்னொரு கிருதியில் இதனை அறிந்து கொள்வதைப் பற்றி:

பிண்டாண்டதொளகெ கண்டன (பிம்ப மூருதிய) காணதெ |
முண்டெயராதரு (புத்தி இல்லாதவர்கள்) பண்டிதரெல்லா ‖ என்றார்.

ஸ்ரீமதானந்த தீர்த்தர் கூறியதுபோல பகவந்தனின் உபாசனை இரு விதம். எப்போதும் சாஸ்திரங்களை படித்தல், நினைத்தல், பாடம் எடுத்தல், உபன்யாசம் செய்தல் ஆகியன முதல் விதம். இரண்டாவது - இதை எல்லாம் அறிந்து பிம்பனை மனதில் இருத்தி தியானத்தில் ஈடுபடுவது.

**புஷ்ய பகுள ஏகாதசி**

## பிம்போபாசனை - 2

பிம்போபாசனை என்பது சாஸ்திரங்களில் சொல்லியிருக்கும் முக்கிய தத்வம். பகவந்தனான ஸ்ரீஹரி அனைத்து ஜீவர்களிலும் பிம்பமூர்த்தியாக இருக்கிறான். இவனின் தரிசனம் – சாஸ்திரங் களைப் படித்தல், மனனம் செய்தல் மற்றும் தியானத்தினால் மட்டுமே சாத்தியம் என்று ஸ்ரீமதாசார்யர் தெரிவிக்கிறார். ஹரி தாசர்கள் தியானத்திற்கு முக்கியத்துவம் கொடுத்து பகவந்தனின் தரிசனத்திற்கு முயன்றனர். ஸ்ரீஜகன்னாததாசர் பிம்பரூபியைப் பற்றி, அவனின் சிறப்பினைப் பற்றி சொன்னது இது:

முக்தபிம்பனு துரிய ஜீவ
ந்முக்தபிம்பனு விஷ்வ பவசம்
சக்தபிம்பனு தைஜசனு அஸ்ருஜ்யரிகெ ப்ராக்ஞ |
ஷக்தநாதக சரியே சர்வோ
த்ரிக்தனாதரு சரியே சர்வோ
த்ரிக்தமஹிமனு துக்க சுககள
வியக்தமாடுதலிப்ப கல்பாந்த்யதலி பப்பரிகெ || (24-1)

ஸ்ரீஹரியே அனைத்து ஜீவர்களின் பிம்பரூபி. முக்தர், ஜீவன்முக்தர், சம்சாரிகள் மற்றும் அஸ்ருஜ்யர் என்று ஜீவர்களை நான்காகப் பிரித்து, துரிய, விஷ்வ, தைஜஸ மற்றும் ப்ராக்ஞ என்ற நான்கு ரூபங்களில் ஸ்ரீஹரி இந்த ஜீவர்களுக்கு பிம்பரூபி என்று அழைத்துக் கொள்கிறான். இந்த அனைத்து ரூபங்களும் சர்வவியாப்தனான விஷ்ணுவின் ரூபங்களே ஆகும்.

பிரதிபிம்பன், அ-ஸ்வதந்திரன் என்று சொல்லிய ஜீவன் பிம்பரூபியின் உபாசனையினால் மட்டுமே சக்தியைப் பெறுவான். இவனே ஜீவன்முக்தன்.

வாசுதேவனு ஔஹொரகெ ஆ
பாஸகனு தானாகி பிம்ப ப்ர
காஷிசுவ தத்ரூப தன்னாமதலி சர்வத்ர |
ஈ சமன்வயவெந்தெனிப சது
பாஸனெய கைவபனு மோக்ஷா

ந்வேஷிகளோளுத்தமனு ஜீவன்முக்தனவனியொளு ||(11-22)

வாசுதேவ ரூபி ஸ்ரீஹரி, பிம்பனாகி அனைத்து இடங்களிலும் வியாபித்திருக்கிறான். இவனை பூஜிப்பதே முக்கிய இலக்காக வைத்து, அதை செய்பவன் - ஜீவன்முக்தன்.

கலுஷவில்லத தர்பணதி பிரதி
பலிஸி சர்வபதார்த்தகளு க
ங்கொளிசுவந்ததி பிம்ப ஜட சேதனகளொளகித்து |
பொளெவ பஹுரூபதலி சஜ்ஜன
ரொளகெ மனதர்பணதி தா நி
ஸ்சல நிராமய நிர்விகார நிராஸ்ரய அனந்த ||(7-4)

எத்தகைய பிம்பரூபியை பூஜிக்கவேண்டும் என்று உதாரணத்துடன் விளக்குகிறார் தாசர். சுத்தமான கண்ணாடியில் அனைத்தும் தெளிவாகத் தெரிவதுபோல, ஜட-சேதனர்களில் இருக்கும் பிம்பரூபி ஸ்ரீஹரி, சஜ்ஜனர்களின் மனம் என்னும் கண்ணாடியில் வெளிப்படுகிறான். தூய்மையான மனதினால் இவனின் உபாசனையை செய்து மேம்படவேண்டும்.

**புஷ்ய பகுள த்வாதசி**
**நல்வழியைக் காட்டுவாயாக ஹரியே!**

அகிலாண்டகோடி பிரம்மாண்ட நாயக என்று ஸ்ரீஹரியை மட்டுமே அழைக்கிறோம். இந்த பிரம்மாண்டத்தில் அது யாரே ஆகட்டும், எந்த தேசத்தில் இருக்கட்டும், எதுவாக ஆகட்டும், எந்த காலத்திலும் யாரும் படைப்பவர்கள் அல்லர். அவனிடம் சரணடையாது, நமக்கு வேறு வழியில்லை. இந்த தத்வங்களை பரப்புவதற்கென்றே அவதரித்து வந்த விபூதி புருஷர் (சிறந்தவர்), ஹரிதாச சாகித்யத்தின் இரண்டாம் கட்டத்தில் இருப்பவர்களுக்கு நாயகனாக விளங்கும் ஸ்ரீராகவேந்திர ஸ்வாமிகள். பரமாத்புதன் என்று நினைத்த ஸ்ரீஹரியிடம் இவர் எப்படி வேண்டிக்கொண்டார் என்பதைப் பார்த்தால், ஆத்ம நிவேதனத்திற்கு இதுவே சிறந்த உதாரணம்.

நொந்தேனய்யா பவபந்ததொளு சிலுகி
முந்தேதாரி காணதே குந்திதே குஜனர

கந்தனெந்தென்ன முந்துகள எணிஸதெ
தந்தே காயோ கிருஷ்ணா கந்தர்ப்ப ஜனகனே ||

ஸ்ரீராகவேந்திர ஸ்தோத்திரத்தில் ‘சம்சாரே அக்ஷயசாகரே...’ என்று வர்ணித்து, அதிலிருந்து நம்மை கரைசேர்க்குமாறு ராயரை வேண்டும் வழி இருக்கிறது. நம் ஆத்ம நிவேதனம் எப்படி இருக்க வேண்டும் என்று ராயர் இங்கு காட்டினார். ஸ்ரீஹரியின் பாதார விந்தங்களைக் காண்பதற்கு அவனையே வேண்ட வேண்டும் என்கிறார்.

இந்து எனகே கோவிந்தா நின்னய பாதார
விந்தவ தோரோ முகுந்தனே || -- என்றார்

ஸ்ரீஹரி தரிசனம் கொடுத்தால் அதுவே நம் மேம்பட்டதன் அடையாளம். சம்சாரத்தில் இருக்கும் பிரச்னைகளை அவனிடமே சொல்லி முறையிடுவது இப்படி:

மூடதனதி பலு ஹேடி ஜீவனனாகி
த்ருட பகுதியன்னு மாடலில்லவோ ஹரியே
நோடலில்லவோ நின்ன பாடலில்லவோ மஹிமெ
காடிகார கிருஷ்ணா பேடிகொம்பேனோ கிருஷ்ணா ||

தாருணியொளு பலு பார ஜீவனனாகி
தாரி தப்பி நடெதெ சேரிதெ குஜனர
ஆரு காயுவரில்ல சேரிதே நினகய்யா
தீர வேணுகோபால பாருகாணிஸோ ஹரியே ||

சம்சார சாகரத்திலிருந்து நம்மைக் காப்பாற்றும் படகோட்டி ஸ்ரீஹரியே. அவனைத் தவிர வேறு யாரும் இல்லை. சஜ்ஜனர்களின் மேம்பாட்டிற்காக இதை நமக்கு எடுத்துக்காட்டிய ஸ்ரீராகவேந்திரர், அனைவருக்கும் சிறந்த வழிகாட்டியாக இருக்கிறார். இந்த ஆத்ம நிவேதனத்தின் படியை ஏறுவதற்கு அவரின் அருளை வேண்டுவோம்.

**புஷ்ய பகுள த்ரயோதசி**

## நவக்கிரகங்கள்

வைதிக சாஸ்திரங்களில் நவக்கிரகங்களைப் பற்றி பல்வேறு குறிப்புகள் உள்ளன. பகவந்தன் மற்றும் வாயுதேவரிடம் ஆணையைப் பெற்று, செயல்களை செய்யும் தேவதைகள் இவர்கள்.

நம: சூர்யாய சந்திராய மங்களாய புதாய ச |
குருசுக்ர சனிப்யஸ்ச ராகவே கேதவே நம: ||

இப்படியே ஹரிதாச சாகித்யத்திலும், நவக்கிரகங்களை, தனித்தனியாகவும், மொத்தமாகவும் பாடல்களில் பாடியுள்ளனர். நம் வினைப் பயனுக்கேற்ப அந்தந்த ராசிகளில் இருந்து, நமக்கு பலன்களைக் கொடுக்கும் தேவதைகள். தாரதம்யத்திற்கேற்ப இவர்களை வேண்டுவதும் அவசியமானதாகும். புரந்தரதாசர் சொல்வது போல:

சகல கிரஹபல நீனே சரசிஜாக்ஷ
ரவிசந்திர புத நீனே ராஹுகேதுவு நீனே
கவிகுரு சனியு மங்களனு நீனே

எனில், இந்த அனைத்து கிரகங்களும் பகவந்தனால் நியமிக்கப்பட்டவை. அவனின் ஆணைக்கேற்ப செயல்களை செய்கின்றனர் என்றே அறியவேண்டும். ஆகையால், இந்த கிரகங்களின் அருளும் நமக்குத் தேவை. ஸ்ரீவாதிராஜர் தமது நவக்கிரக ஸ்தோத்திரத்தில் இவர்களின் அருள் நமக்கு ஏன் தேவை என்று சொல்கிறார்:

ஹரேர் அனுக்ரஹார்தாய ஷத்ரூணாம் நிக்ரஹாய ச |
சூரியன்: சர்வக்ஞ நீனெந்து சர்வத்ர எனகெ சத்பிரம்மஞான பகுதி கருணிஸோ |
சந்திரன்: ப்ருத்யனு நானய்ய எந்தெந்து ப்ரார்திசுவெ ஹ்ருத்திமிர களெது சந்தெயிசு |
செவ்வாய்: பாமரனிகளவே எந்தெந்து சஜ்ஜனர காமிதார்த்தவனெ கருணிஸோ |
புதன்: க்ஷுதெய சம்ஹரிஸே சுக்ஞான சத்பக்தி சுதெய பானவனெ கருணிஸோ |

குரு: துர்மதிய பரிஹரிஸே சுக்ஞானவித்து ஶ்ரீபதிய தோரென்ன மனதல்லி ।
சுக்ரன்: பாகவத பாரத மொதலாத சாஸ்த்ரகள ஸ்ரவணசுகவெனகெ கருணிஸோ ।
சனி: எரகி பின்னயிபெ இனிதெந்து பஹுபாப த்வரிததிந்தளிஸே பொரெயெந்து ।
ஹ்ருதயவதனதல்லி ஹரிமூர்த்தி கீர்த்தனெகளொதகலி எனகெந்து பின்னெயிபெ ।
ஜகன்னாதவிட்டலன பதிரகிவரஹுதெந்து ஹகலு இருளு இவரா துதிஸுவா ।
ஹகலு இரளு இவரா துதிசுவ மஹாத்மரிகெ சுகதிகளனித்து சலஹோது ॥

## புஷ்ய பகுள சதுர்தசி

## நமது பிரார்த்தனை இதுவாக இருக்கட்டும்

'தாசனெந்தாகுவேனு தரெயொளகெ நானு' என்று புரந்தரதாசர் தனது மனதின் ஆசையை வெளிப்படுத்தினார். தம் மனோதர்மம், சாதனைக்கு வந்த இடர்கள் ஆகியவற்றை சொல்லி அவர் பாடிய பாடல்:

தாசன்ன மாடிகோ என்ன ஸ்வாமி
சாசிர நாமத வேங்கட ரமணா ॥ப॥

'ஹே ஸ்வாமி! நீ ஈசன். அதற்கே என்னை தாசனாக ஆக்கிக் கொண்டு என்னை மேம்படுத்து' என்று வேண்டினார் தாசர். 'தாசன்ன மாடிகோ என்ன' - இதுவே அனைத்து சஜ்ஜனர்களின் வேண்டு கோள் ஆகவேண்டும் என்று தாசர் குறிப்பிடுகிறார். இதற்கு என்ன காரணம் என்றும் சொல்கிறார். என் வினைப் பயன்களை அழி என்று வேண்டுகிறார்.

துருள புத்திகளெல்ல பிடிஸோ நின்ன
கருண கவசவென்ன ஹரணக்கெ தொடிஸோ
சரண சேவே எனகே கொடிஸோ
அபயகரபுஷ்பவ என்ன சிரதல்லி முடிஸோ ॥1॥

வாழ்க்கையை சன்மார்க்கத்தில் நடத்த சொல்லப்பட்ட வார்த்தைகள் இவை. 'நான் தாசன் என்று எண்ணிக்கொள்ள, என்னிடமிருக்கும் தோஷங்களை நீயே நிவர்த்தி செய்' என்கிறார். பகவந்தனின் கருணை என்னும் கவசம் எனக்கு இருக்கட்டும். கூடவே உன் அபயம் என்னும் கரத்தை என் தலையில் வைத்து என்னை காப்பாற்று என்கிறார்.

த்ருடபக்தி நின்னல்லி பேடி நா
அடிகெரகுவேனய்யா அனுதின பாடி
கடெகண்ணிலேகென்ன நோடி பிடதே
கொடு நின்ன தியானவ மனசுசி மாடி ||

ஸ்ரீஹரியின் தரிசனம் தேவையெனில், அவனிடத்தில் தூய்மையான, திடமான பக்தி இருக்கவேண்டும். அவனின் மகாத்ம்ய ஞானத்துடனான பக்தி வேண்டும். அதனையும் நீயே எனக்குக் கொடு என்றார். தூய்மையான மனதுடன் செய்யும் சாதனைகள் மட்டுமே பலனைக் கொடுக்கின்றன. அதையே வேண்டுகிறார்.

மொரெஹொக்கவர காய்வ பிருது என்ன
மரெயதெ ரக்ஷணே மாடய்ய பொரெது
துரிதகளெல்லவ தரிது ஸ்ரீ
புரந்தரவிட்டல என்னன்னு கரெது ||

'ஸ்ரீஹரி பக்தவத்ஸலன், எதையும் எதிர்பார்க்காத நண்பன், கருணைக்கடல் என்றெல்லாம் பெயர் கொண்டிருப்பதால், என்னை உன் பக்தன் என்று நினைத்து காப்பாற்று, தேவா' என்று கேட்கிறார். இதற்கெல்லாம் முதலில் என்னை தாசனாக ஏற்றுக்கொள் என்கிறார். இந்த வேண்டுகோள் நமதும் ஆக வேண்டும். அப்போதே நாம் மேம்படுவோம்.

**புஷ்ய அமாவாசை**

**ஸ்ரீபுரந்தரதாசரின் ஆராதனை**

மன்மனோ பீஷ்டவரதம் சர்வாபீஷ்ட பலப்ரதம் |
புரந்தர குரும்வந்தே தாசஸ்ரேஷ்டம் தயாநிதிம் ||

பக்தி சாகித்யம் என்று அழைக்கப்பட்ட கன்னட ஹரிதாச சாகித்ய உலகில் முதல் இடம் இவரது ஆகும். இத்தகைய உலகில் த்ருவ நட்சத்திரமாக விளங்குபவர் ஸ்ரீபுரந்தரதாசர். கோடியில் ஒருவராக, லட்ச ஆண்டுகளில் ஒருவராக அவதரித்து வந்த யுகபுருஷர் இவர். சித்தாந்தம், சம்ஸ்க்ருதி, சாஹித்யம், சங்கீதம், கலைகள் என அனைத்தையும் வளர்த்த மஹானுபாவர். ஹரிதாச பரம்பரையே இவரை புகழ்ந்து பாடி, பாடி கொண்டாடியிருக்கிறது.

ஸ்ரீனிவாச நாயகரு, புரந்தரதாசர் ஆனது ஒரு அற்புத சம்பவம். இறைவனின் விளையாட்டு. இவரின் வாழ்க்கையின் ஒவ்வொரு கட்டமும் நமக்கு ஒரு பாடம். அவரின் அனைத்தையும் சர்வோத்த மனுக்கே அர்ப்பித்தார். மனைவி, மக்களுடன் இறைவனை தேடிய வாறு புறப்பட்டார். ஸ்ரீவியாசராஜர் போன்ற குருகளின் அருள், ஸ்ரீஹரியின் பரமானுக்கிரகம் இவருக்கு காப்பாக இருந்தது. பாடல்கள், பத்யங்களை இயற்றுவதுடன், தீர்த்தயாத்திரைகளை செய்தார். சமூகத்தின் நடவடிக்கைகளை திருத்துவதில் புகழ்பெற்றார். கர்னாடக சங்கீதத்தின் பிதாமகர் என்று அழைக்கப்பட்டார். 'தாசரெந்தரெ புரந்தரதாசரய்யா' என்று பெயர்பெற்று, குருவின் மூலமாகவே இவரது கிரந்தங்கள் 'புரந்தரோபநிஷத்' என்றும் புகழ் பெற்றது.

குருவின் மூலமாக கனவில் அங்கிதம் பெற்ற தாசவரேண்யரான ஸ்ரீவிஜயதாசர், இவரின் சரித்திரத்தை இயற்றினார். அதிலேயே, புரந்தரதாசரின் கீர்த்தனைகளை தொகுக்கும் வேலையும் நடந்தது. சிறந்த பக்தியினைக் கொண்டிருந்த விஜயதாசரின் சில வாக்குகளைப் பார்ப்போம்.

குருபுரந்தரதாசர நெரெனம்பலு |
நிருதகலிது விஜயவிட்டல ஒலிவ || என்றார்

'குருபிரசாதோ பலவான் ந தஸ்மாத்பலவத்தரம்' என்றது போல தாசரின் வாக்கு இவ்வாறாக இருக்கிறது:

ஏனு பலவித்தரேனு தன்ன குருகள பல
லேசாகி இல்லதிரெ ஒந்தூ பலவீயது ||

ஆகவே, குருகளின் கருணை பலம் மிகவும் அவசியம். இதனைப் பெற்றிருந்த நம் தாசர் - ஏனு கருணிகளோ நம்ம ஈ குருகளு - என்று பாடினார்.

இந்திகாகுரு ஷிரோமணி என்ன துரிததிந்த செளெது
பரமார்த்தர மார்க அரிவு மாடி
கருணாசாகர நம்ம விஜயவிட்டலன
ஸ்மரிசுவுதக்கெ ஞானவன்னெ தோரிதரு || -- ஸ்ரீவிஜயதாசர்

ஸ்ரீவியாசராஜர், சிஷ்யனின் நடவடிக்கைகளை கவனித்து பாடியது:

தாசரெந்தரெ புரந்தரதாசரய்யா |
வாசுதேவ கிருஷ்ணன்ன சூசி பூஜிசுவந்த ||

இறுதியில் இவரை 'பூதாத்ம புரந்தரதாசர் இவரய்யா' என்று பாடி புகழ்ந்தார்.

விஜயதாசருக்கு தம் குருகளை எவ்வளவு புகழ்ந்தாலும் போதாது.

ஷரணு வியாசமுனி சரணாப்ஜ ப்ருங்க ஜய
சரணு ஞான பகுதிவைராக்யபரனெ ஜய
சரணு தாசோத்தமர மணியெ
நினகார்யணியெ குருபுரந்தர தாசரே || என்றார்.

பிரசன்ன வேங்கடதாசர் புரந்தரதாசரைப் பற்றி பாடியது:

தந்தெ புரந்தரதாசர ஸ்மரிசுவெ என்ன
மந்தமதிகளெது ஹரிபடனெனிசுவெ ||

கீதடாயி சுளாத்யகாபோக பதபத்யவ்ராத ப்ரபந்த ரசிஸி விடலன |
ப்ரீதி படிஸி கண்டு நலிவ வைஷ்ணவாக்ர நாத ப்ரசன்னவேங்கட கிருஷ்ணப்ரியன ||

ஸ்ரீஜகன்னாததாசர்:
தாசராய ப்ரதிவாசரதலி ஸ்ரீனி
வாசன்ன தோரொ தயாசாந்த்ர புரந்தர ||

ஸ்ரீஅபினவ ஜனார்த்தனர்:
புரந்தரதாசர கருணவ சம்பாதிஸி
தரெய மேலே சரிஸி ஸ்ரீஹரிய
கருணவ சம்பாதிஸி சிரிய தூரனாகி
வரசத்கதி சேருவ மனெமாடெலோ ||

ஸ்ரீரகுபதிவிட்டலர்:
புரந்தரதாசர பாத பதுமவ கண்டே
ஹரிது ஹோயிது என்னந்த ஜனுமவ ஆக ||

மகாவிபூதி புருஷரான ஸ்ரீபுரந்தரதாசர் தாம் சாதனை செய்து, மற்றவர்களையும் தம்முடன் இழுத்து, கோடிக்கணக்கான மக்களின் மனதில் இருந்து, அவர்களுக்கு அருளி, ஸ்ரீஹரியின் கிருபைக்கு பாத்திரராகுமாறு செய்த, தாசருக்கு கோடிகோடி நமஸ்காரங்கள்.

***

**ஸ்ரீகிருஷ்ணார்ப்பணமஸ்து**